

விக்ஞை : கே. எம். ஆதிமூலம்

# கசடதபற

25

அக்டோபர் 1972

1.00

## வாசகர் வட்டத்தின் 1972-ஆம் ஆண்டு வெளியீடுகள்

**இந்திய ஓவியம்**
எம். எஸ். ராமசாமி — ரூ. 6-00

**அறிவின் அறுவடை**
லெஸ்டர் பிரௌன்
தமிழாக்கம் : சிட்டி — ரூ. 6-00

**கடலோடி**
நரசய்யா — ரூ. 5-25

**கலைக்கடலும் கருங்கடலும்** (அச்சில்)
தி. ஜானகிராமன்

சிறப்பு நூல்

**நடந்தாய், வாழி காவேரி**
சிட்டியும் தி. ஜானகிராமனும் — ரூ 10-00

விற்பனை உரிமை நூல்கள்

**உதய நிழல்**
எஸ். வைதீஸ்வரன் — ரூ. 3-00

**வாழ்விலே ஒரு முறை**
அசோகமித்திரன் — ரூ 5-00

**மோக முள்**
தி. ஜானகிராமன் — ரூ. 15-00

(தபாற் செலவு கூடுதல்)

1972-ஆம் ஆண்டுச் சந்தா ரூ. 20/- இதற்கு நான்கு நூல்கள் தரப்படும். முதல் நூல் 'கடலோடி'.



**வாசகர் வட்டம்**

14 தணிகாசலம் செட்டி ரோடு

சென்னை 17



லினோ : தட்சிணாமூர்த்தி

# அக்கம் பக்கம்

பலருக்கு இலக்கிய விமர்சனத்தைத் தாங்கிக் கொள்ளும் திராணி வரவே இல்லை. அது ஒருவருடைய அபிப்ராயம் என்கிற அளவில்கூட நினைத்துப் பார்க்க மனம் ஒப்ப மாட்டேன் என்கிறது. பகைமைக்காய்ச்சல், பங்காளிக் காய்ச்சல் பாவத்தோடு தான் அதைப் பார்க்கிறார்கள்.

இது இலக்கியத்தில் மட்டுமல்ல, வாழ்க்கையிலும்தான். நம்முடைய சமூக வாழ்க்கையில் பலகாலமாக ஊறிவிட்ட ஒரு முறை இது. ஒருவரின் குறைகளை அவரிடம் நேருக்குநேர் சொல்லும் பழக்கம் கிடையாது; அப்பா செய்யும் தப்புபற்றித் தெரிந்திருந்தும் குடும்பத்தில் அது பற்றி அபிப்ராயம் சொல்லக் கூட யாருக்கும் துணிவு கிடையாது. இந்த நிலைதான் எல்லாவற்றிலும் நீடிக்கிறது.

இதனால்தான் எழுத்தாளர்கள்கூட படைப்புக்கள் பற்றிய நிஜமான அபிப்ராயத்தை வெளியிடக் கூசுகிறார்கள். 'நமக்கேன் வம்பு' என்கிற ஆசுவாசப் போக்கு எல்லா மட்டத்திலும் இருக்கும் வரை விமர்சனம் வளராது.

ஃ ஃ ஃ

சமீப காலமாக இலக்கிய உலக ஜாம்பவான்கள் என்று சொல்லிக்கொள்பவர்கள் விஷயத்தை விட்டு விட்டுத் தனிப்பட்ட நபர்களைத் தரக்குறைவாகத் தாக்கும் பணியில் ஈடுபட்டுள்ளார்கள்.

ஒரு படைப்பாளி தோட்டியா, பீடி சுருட்டுபவனா, பரிசாரகனா, நாவிதனா, வண்ணானா, குருக்களா, குமாஸ்தாவா, ஆபீஸரா என்பது அல்ல முக்கியம். அவனது படைப்புக்கள்தான் நமக்கு முக்கியம்.

அவனது படைப்புக்களில் மூத்திரச் சந்தையும், சைக்கிள் துடைத்தலையும், காத்து இருத்தலையும் பற்றி எழுதுவதில் எந்தவிதமான குற்றமும் கிடையாது. எழுதப்பட்ட விஷயம் இலக்கியமாக-கலையாக வந்துள்ளதா என்பதுதான் முக்கியம். இதுதான் இலக்கியத்தின் அடிப்படை. நிஜமான இலக்கிய சிருஷ்டிகளுக்கு தீட்டு, தீண்டாமை, பாவம், புண்ணியம் இவையெல்லாம் கிடையாது. சநாதனிகளுக்கும், ஆஷாடபூதிகளுக்கும்தான் இந்தத் தொந்தரவுகள்; தயக்கங்கள்.

சொல்லப்பட்ட கருத்துக்களுக்குப் பதில் சொல்வதுதான் நாகரிகம். அதைவிட்டு, மட்டரகமான புளுகன், அற்பபுத்தி படைத்த அவதூறுக்காரன், ஆணவக்காரன், ஈழத்து எழுத்துலகில் புறக்கணிக்கப்பட்டவர் சென்னையில் தனது சித்து வேலையைக் காட்ட முனைந்துள்ளார் என்றெல்லாம் தி. க. சி., தருமு சிவராமு பற்றி 'தாமரை'யில் எழுதுவது எந்தத்தரத்தில் சேர்த்தி என்பது விளங்கவில்லை.

மக்கள் எழுத்தாளர் சங்கக் கூட்ட மொன்றில் தன்னை விமர்சனம் செய்த டாக்டர் எஸ். என். கணேசனை நா. காமராசன் தரக் குறைவாகப் பேசியபோது, அது நாகரிகக் குறைவான செயல் என்று சுட்டிக் காட்டிய தி. க. சி. யின் நாகரிகத்துக்கு என்ன வந்துவிட்டது? ஒருகால் தி.க.சி. யின் நாகரிகம் கட்சிக்காரராகவோ, ஊர்க்காரராகவோ அல்லது குறைந்த பட்சம் சமவயதுக்காரராகவோ இருந்தால்தான் வெளிப்படும் போலிருக்கிறது.

திடீரென்று தி. க. சி. ஆத்திரப் படுவதைப் பார்க்கும் போது இது ஒரு பின் விளைவு என்றுதான் படுகிறது.

ஃ ஃ ஃ

சாகித்ய அகாடமிக்கு ஒவ்வொரு மொழியிலும் ஒரு குழு இருக்கிறது. இக் குழுவின் வேலை தமிழிலிருந்து பிறமொழிகளுக்கு மொழி பெயர்க்க நூல்களைத் தேர்ந்தெடுத்து சிபாரிசு செய்வது; பிறமொழி நூல்களைத் தமிழில் மொழிபெயர்க்கத் தக்கவர்களைச் சிபாரிசு செய்வது. கூடவே அகாடமி வெளியிடும் புத்தகங்களை மதிப்புரைக்கு பத்திரிகைகளுக்கு அனுப்ப சிபாரிசு செய்வது. இந்த வேலைகளை இந்தக்குழு தமிழில் உபயோகமில்லாமல் நிறைவேற்றி வருகிறது என்பது குறிப்பிடத்தக்கது.

'பிளாட்டோ'வுக்கு வெ. சாமிநாத சர்மாவின் தரமான மொழி பெயர்ப்பு இருக்க அதைத் தள்ளிவிட்டு படிக்கமுடியாத ஒரு சுருக்கப் பதிப்பைக் கொண்டு வந்திருக்கிறார்கள். லேடி மூராஸகியின் 'செஞ்சிக் கதைகளை' அப்பாத்துரையிடம் கொடுத்துப் படிக்க முடியாமல் மொழி பெயர்க்கச் செய்திருக்கிறார்கள்.

புத்தகங்களுக்குத் தரமான மதிப்புரை எழுதும் பத்திரிகைகளுக்கு புத்தகங்களை அனுப்பி விடாமல் பார்த்துக் கொள்கிறார்கள். மதிப்புரை வருகிறதோ இல்லையோ, புத்தகங்களை புகழ்பெற்ற பத்திரிகைகளுக்கு அனுப்பி விடுவார்கள், அதுமட்டும் நிச்சயம்.

ஃ ஃ ஃ

"கதை, கட்டுரைகளைத் திருத்தி அமைக்கும் உரிமை ஆசிரியருக்கு உண்டு"—குமுதத்தில் சில மாதங்களாக வெளியிடப்படும் வரிகள் இவை.

இந்தக் கட்டுப்பாட்டிற்கு உட்பட்டு சுய கௌரவம், தன்னம்பிக்கை ஆகியவைகள் அற்று அப்பத்திரிகையில் எழுதும் எழுத்தாளர்களைப் பற்றி நமக்குக் கவலை இல்லை. என்றாலும் இதில் முக்கியமாக கவனிக்கப்பட வேண்டிய ஒன்று இருக்கிறது. பிரசுரமாகி இருக்கும் கதையில் பத்திரிகை ஆசிரியரின் வரிகள் எவை, கதாசிரியரின் வரிகள் எவை என்பதை ஒரு பாமர வாசகன் எப்படித் தெரிந்து கொள்வது என்பதுதான் கேள்வி. பணமும் புகழும் தான் பிரதானம் என்றெண்ணும் மலட்டு எழுத்தாளர்கள் இருக்கும்வரை குமுதம் போன்ற பத்திரிகை ஆசிரியர்கள் திருத்தி அமைக்கும் உரிமை மட்டுமல்ல, வேறுபல நிபந்தனைகளையும் எழுத்தாளர்களிடம் திணிப்பார்கள்; திராணியற்றவர்கள் ஏற்றுக் கொள்ளத்தான் வேண்டும்.

ஃ ஃ ஃ

சென்னை மாக்ஸ் முல்லர் பவனில் சுமார் 17 ஓவியர்களின் 27 படங்கள் கொண்ட ஒரு ஓவியக் கண்காட்சி 'மெட்ராஸ் ஆர்ட்ஸ் கிளப்' ஆதரவோடு நடந்தது. ஆரம்பநிலை ஓவியங்களாகவே பலவும் இருந்தன. கே. விட்டல் ராவின் 'Head' என்கிற ஓவியத்தில் பாவம் நன்றாக விழுந்திருந்தது.

கண்காட்சியில் குறிப்பிட்டுச் சொல்லக் கூடிய ஓவியம் வி. ஜெயராமனுடையது. 'Tragedy of Politics' or 'Post Freedom' என்பது ஓவியத்தின் தலைப்பு.

ஒவ்வொருவரின் சுதந்திரமும், ஆசைகளும் கலப்படமாக்கப்பட்டு நீர்த்துப் போகும்படி அரசியல் செய்து விடுகிறது.

பரந்த நீலவானம். அதில் ஓடும் கோடுகள் குறுகிய நினைப்பைக் காட்டுகிறது. இரத்தமும் எலும்பும் அடித்தோட, ஆறுகள் ஓடுகின்றன. மண்ணின் ஆழ்ந்த சோகத்தை இது சித்தரிக்கிறது.

இந்த எண்ண வெளிப்பாட்டுடன் ஓவியத்தில் வண்ணச் சேர்க்கையும், கற்பனைத் திறனும் அற்புதமாக அமைந்திருந்தன.

ஃ ஃ ஃ

'கசடதபற' இதழ்கள் கிடைக்காதவர்கள் எங்களுக்குத் தெரிவித்தால் மறுமாத இதழோடுதான் சேர்த்து அனுப்ப இயலும். அதுவரை பொறுமையாக இருக்கும்படி கேட்டுக்கொள்கிறேன்.

நா. கிருஷ்ணமூர்த்தி

# நிழல்

சா. கந்தசாமி

ஆற்றில் தண்ணீர் வற்றி மணல் நிறைந்திருந்தது. இருபக்கங்களிலும் சற்றே உயர்ந்த மணல் பரப்பு நடுவில் குறுகி பொடி மணல் நிறைந்திருந்தது. வண்டிகள் குறுக்காகச் சென்றதன் தடம் மணல் வெளியில் அழுந்தித் தெரிந்தது. அந்தத் தடத்திலேயே ராமு சென்று கொண்டிருந்தான்; மணலில் காலை அழுத்தி அழுத்தி வைத்துச் சென்று கொண்டிருந்தான்.

அவன் தலையில் ஒரு வாழைச் சருகுக்கட்டு. நீட்டு வாக்கில் உலர்ந்த வாழை இலைகளை ஒன்றின் மீது ஒன்றாக கவனத்தோடு அடுக்கி உருட்டிச் சுற்றி வாழை நார் கொண்டு அழுத்திக்கட்டிய கட்டு ஓர் உருளை மாதிரி அவன் தலையில் கனத்துக் கொண்டிருந்தது. தோளில் இரண்டு இளநீர்; பெரிய பச்சை இளநீர். ஒன்றின் நாரைக் கொஞ்சம் பிய்த்து இன்னொன்றோடு இணைத்துத் தோளில் மாட்டிக் கொண்டிருந்தான். கால் மணலில் பொதிந்து அழுந்தி மீண்டும் பெயர்கையில் இளநீர் மார்பிலும் தோளிலும் வேகமாக அடித்தது. இளநீர் மோதி ஏற்படும் வலியைவிட, இப்படியே ஆடிக் கொண்டிருந்தால் நார் பிய்ந்து கொண்டே வந்து அக்கரை செல்வதற்குள் கீழே விழுந்துவிடும் போல இவனுக்குத் தோன்றியது. வலது கையை வாழைச் சருகுக்கு இணக்கமாக வைத்துக் கொண்டு, இடது கையால் மார்பு பக்கத்து இளநீரைத் தாங்கிக் கொண்டு, கால்களை மணலில் ரொம்பவும் பதியாமல் எடுத்து வைத்தான். ஆனாலும் முதுகுப் பக்கத்து இளநீர் மோதி ஆடிக் கொண்டு நார் கிழிய, கீழே சென்றது. இவன் திடீரென்று கால்களை நன்றாக அழுத்தி ஊன்றி நடக்க ஆரம்பித்தான். கால்கள் மணலில் பதிந்து பெயர்ந்தன. எலும்புத் துண்டொன்று மணலிலிருந்து லேசாகத் தலையைக் காட்டியது. இவன் பார்வை தாழ, அதன் மீது கால் வைத்து அழுத்தி மிதித்துக் கொண்டு சென்றான்.

நார் பிய்ந்து கொண்டே வந்த இளநீர் பின் பகுதியில் கொஞ்சம் இறுக்கத்தோடு இருந்தது. இப்படியே இருந்தால் அக்கரைக்குச் சென்று விடலாம் என்று இவனுக்குப் பட்டது. சிறிது தூரம் நடந்தான். மணல் பொதியாகி வேகத்தைக் குறைத்தது; நடை தடைப் பட்டது. கால்கள் மணலில் பதிந்த படி இருக்க, தலையைப் பின்னால் திருப்பிப் பார்த்தான். ஆறு வெறும் மணலாக இருந்தது. கரையையொட்டி ஒரு எருமை மேய்ந்து கொண்டிருந்தது. இவன் பார்வை மெல்ல திரும்பி எதிர் கரைக்குச் சென்றது. ஒரு பருந்து, இவன் செல்லும் திசையில் நிதானமாகப் பறந்து கொண்டிருந்தது. இவன் அதையே பார்த்துக் கொண்டு இருந்தான். அதன் வேகம் வர வர குறைந்து கொண்டு வருவதுபோல் இவனுக்குப் பட்டது. கிட்டத்தட்ட அது தன்னை விட்டுப் போய் விட்டது போல இவனுக்கு இருந்தது.

தடைப் பட்டிருந்த கால்கள் மீண்டும் நடக்க ஆரம்பித்தன. ஆற்று மணலில், அவன் சிறுபாதங்கள் சுவடுகளைப் பதித்துச் சென்றன. இவன் நடக்க நடக்க மணல் மாறிக் கொண்டே வந்தது. பொடி மணல் மாறி பெருமணல், சிறு கற்கள். எலும்புத் துண்டுகள். கோரைப் புல். இவன் சறுகலான கரையில் கால் வைத்தான். கால்கள் பதியாவிட்டாலும் நடப்பது கஷ்டமாக இருந்தது. வண்டிகள் ஏறியும் இறங்கியும் பாதை சறுகலாக இருந்தது. ஒவ்வொரு அடியையும் வெகு கவனத்தோடும் நிதானத்தோடும் எடுத்து வைத்தான். மேலே செல்லச் செல்ல முதுகுப் பக்கத்து இளநீரின் நார் பிய்ந்து கொண்டு வந்தது. இன்னும் கொஞ்ச தூரம் போனால் கரை வந்து விடும். கரையில் உட்கார்ந்து இளநீரை மீண்டும் கோர்த்துக் கொள்ளலாம்—

இவன் இன்னுமொரு அடி எடுத்து வைத்தான். இளநீர் அறுந்து உருண்டது. இவன் தடுமாறிப்போனான். முட்டிப்போட்டு கால்களை மடித்து, கைகளை ஊன்றி ஒருவாறு தன்னைச் சமாளித்துக் கொண்டான். ஒரு பக்கமாகச் சரிந்த வாழைச் சருகுக் கட்டை நேர் செய்து கொண்டான். இவன் பார்வை இளநீரை நோக்கித் திரும்பியது. இரண்டு இளநீர்களும் பத்தடி இடைவெளிக்கு ஒன்றாய்

கிடந்தன. தலையிலிருந்து சருகுக் கட்டை இறக்கிக் கக்கத்தில் அடக்க முடியாமல் அடக்கிக் கொண்டு ஒரு துள்ளலோடு மீண்டும் ஆற்றுக்குள் இறங்கினான்.

சருகுக் கட்டை மணலில் போட்டுவிட்டு ஒரு இளநீரையெடுத்து வந்து மற்றொன்றின் பக்கத்தில் போட்டுக் கொண்டான். மணலில் நன்றாகக் கால்களைப் பரப்பி உட்கார்ந்து கொண்டு ஒரு இளநீரையெடுத்து தலையைச் சாய்த்து நுனிபல்லால் கொஞ்சம் ஆழமாகக் கடித்து நாரைக் கிழித்தான். கொஞ்சம் நார் வந்தது. பிறகு கால்களை முட்டிப் போட்டுக் கொண்டு இரு கைகளாலும் இளநீரை ஏந்திப் பற்றிக் கொண்டு நுனிப் பல்லால் நாரை இடுக்கிக் கொண்டு, இளநீரை கீழே இழுத்தான். பட்டையாக, கத்தியால் குத்திக் கிழித்தது போல் நார் வந்தது. ஒரு தரம் பார்த்துக் கொண்டான். இது போதும்போல் தோன்றியது. இரண்டாவது இளநீரைக் கையில் எடுத்துக்கொண்டு பார்த்தான். அதில் நார் இருந்தது. கட்டினால் தாங்கும். இவன் மீண்டும் இளநீரை ஒன்றாகப் பிணைத்தான். முடிச்சைப் பல்லால் கடித்து இறுக்கினான். இப்போது, முனீஸ்வரன் மரம் வரையில் தாராளமாகப் போகலாம் என்று பட்டது.

மாமா சொன்னதைக் கேட்டிருந்தால், தன்னந் தனியாக ஆற்றில் நின்று கொண்டு இருக்க வேண்டியதில்லை. சீனியிடம் இளநீரையும் வாழைச் சருகுக் கட்டையும் கொடுத்துவிட்டு கைவீசிக் கொண்டு வந்திருக்கலாம். அதில் இவனுக்கு இஷ்டமில்லை. தானே எடுத்துச் செல்ல வேண்டும் என்ற விருப்பம். மாமா சொன்ன சொல்லைத் தட்டி விட்டு எடுத்துக் கொண்டான்.

இளநீரைக் கீழே போட்டு உட்கார்ந்து கொண்டான். கஷ்டத்திலும் சிரிப்பு வந்தது. இப்போதுதான் நினைவுக்கு வந்தது மாதிரி பையில் கையை விட்டுப் பார்த்தான். ஒரு கட்டு சுருட்டு; கிடா மார்க் சுருட்டு. எத்தனைச் சுருட்டுக்கள் இருக்கும். இவன் எண்ணவில்லை. ஆனாலும் பத்துப் பன்னிரண்டு இருக்கும்போல் தோன்றியது. பையில் கவனமாகச் சுருட்டைத் திணித்துக் கொண்டான். தான் சீக்கிரம் போகவேண்டும்—எவ்வளவு சீக்கிரம் முடிகிறதோ அவ்வளவு சீக்கிரமாகப் போகவேண்டும் என்று இவனுள் ஒரு பரபரப்பு மூண்டது.

சருகுக்கட்டை ஒரு கையால் பற்றிக் கொண்டு நடக்க ஆரம்பித்தான். கால்கள் மணலில் பதிய நடையின் வேகம் குறைந்தது. ஒவ்வொரு அடியையும் வெகு நிதானமாக எடுத்து வைத்தான். மேலே போகப்போக முழுபாரமும் கையில் இறங்குவது போல் இருந்தது. சருகுக்கட்டையை வாயில் கவ்வி இடது கைக்கு இளநீரை மாற்றிக் கொண்டான். இன்னும் கொஞ்ச தூரந்தான்...

இந்த மேட்டை ஏறிவிட்டால் ஒரு இறக்கம். நல்ல இறக்கம். கீழே போவது கஷ்டமில்லை. கால்கள் தானாகவே ஓடும். இவனுக்கு அந்த ஓட்டம் பிடிக்கும். பள்ளிக்கூடம் விட்டு வந்ததும் அப்படித்தான் சறுக்கி ஆடுவான். இப்போது அம்மாதிரி சறுக்கிக் கொண்டு செல்ல முடியாது. இரண்டு கைகளிலும் பாரம் இருக்கிறது. வரும்போது ஒன்றாக ஓடிவந்து சறுக்கிக் கொண்டு செல்ல வேண்டும்.

இவன் கால்களை நன்றாக ஊன்றி இடுப்பை வளைத்து மெல்ல மெல்ல ஒவ்வொரு அடியாக எடுத்துவைத்துக் கரைக்கு வந்தான். மூச்சு வாங்கியது. இளநீரைக் கீழே வைத்தான். அதன் மேல் சருகுக்கட்டு. கையை மாறி மாறி உதறிக் கொண்டான். ஒரு கையால் இன்னொரு கையைப்பிடித்து விட்டுக் கொண்டான். இப்போது தன் கையிலிருந்து வலி இறங்கி எங்கோ செல்வது போல் இவனுக்குத் தோன்றியது. புன்சிரிப்பு இதழ்களில அரும்ப—பார்வை ஆற்றங்கரையில் விழுந்தது. ஒரு தயிர்க்காரி சென்று கொண்டிருந்தாள்; அவள் ஊருக்குள் சென்று கொண்டிருக்கிறாள். இவனோ ஊரின் எல்லைக்குச் செல்லவேண்டும்.

இவன் பார்வை இந்தப் பக்கமாகத் திரும்பிய போது, சுடுகாட்டு அரசமரத்தில் ஒரு கழுகு—பழுப்பு நிறக்கழுகு—கழுத்தை நீட்டி இவனையே பார்ப்பது மாதிரி உட்கார்ந்திருந்தது. இவன் மனத்தில் இனந் தெரியாத உணர்ச்சி பரவியது. இவன் பார்வை கழுகு மீதிருந்து அகன்று ஆற்றுப் பக்கம் சென்றது. மணல் நிறைந்த ஆற்றில் தயிர்க்காரி ஒரு கை அலைய அலைய நடந்து சென்று கொண்டிருந்தாள். இவன் என்ன செய்வதென்று யோசித்துக் கொண்டிருக்கையில் ஒரு காற்று கிளம்பி மணலையும் தழைகளையும் வாரிக் கொண்டு சுழன்று சுழன்று மேலே சென்றது.

'—க்கீ' என்று கத்திக் கொண்டு கழுகு சிறகுகளை அடித்துக் கொண்டு பறக்க ஆரம்பித்தது. இவன் மிகுந்த விசித்திரத்தோடு கழுகு போவதையே பார்த்துக் கொண்டிருந்தன. இவன் செல்லும் பாதையிலேயே சுடுகாட்டை யொட்டியே கழுகும் சென்று

கொண்டிருந்தது. இவன் கொஞ்ச நேரம் கழுகையே பார்த்துக் கொண்டிருந்தான். நீளமாகப் பயணத்தைத் துவக்கிய அது, தன்னை மாற்றிக் கொண்டு மேலே போவது போல் இவனுக்குத் தோன்றியது. சந்தோஷமுற்று, புன்னகை பூத்தான். கைகளை உதறிக் கொண்டு சருகுக் கட்டையெடுத்துத் தலையில் வைத்துக் கொண்டு—இளநீரைத் தோளில் மாட்டிக் கொண்டே சாலையில் இறங்கி நடக்கலானான். குறுகலான சாலையை நொச்சியும் கல்யாண முருங்கையும் அடைத்துக் கொண்டிருந்தன. கல்யாண முருங்கையின் செந்நிறப் பூக்களைப் பொறுக்கிக் கொண்டிருந்த ஒரு வெள்ளாடு இவனைக் கண்டதும் மெல்ல கத்திக் கொண்டு சுடுகாட்டை நோக்கி வேகமாக நடைபோட்டது.

சுடுகாட்டைப் பார்க்காமல் நடக்க இவன் மனம் விரும்பியது. ஆனாலும் பார்வை இவனையும் அறியாமல் அந்தப் பக்கம் சென்றது. பார்ப்பான் சுடுகாட்டில் பிணம் வேகுவது போல் இருந்தது. சட்டென்று பார்வையைத் திருப்பிக் கொண்டான். இவன் நடை துரிதமாயிற்று. அநேகமாக ஓடுவது மாதிரி மார்பிலும் தோளிலும் இளநீர்கள் இடிக்கஇடிக்கச் சென்றான்.

கொஞ்ச தூரம் சென்றதும் அடிவயிறு வலிப்பதுபோல் இருந்தது; நடையின் வேகம் குறைந்தது. நின்று இளைப்பாறிக் கொண்டான். மீண்டும் நடக்க ஆரம்பித்தபோது பாதை நீண்டு கொண்டே போவது போல இருந்தது. வண்டியிலே சாய்ந்து உட்கார்ந்து கொண்டு சுகமாக வந்திருக்கலாம் என்ற நினைப்பு வந்ததும் சிரித்துக் கொண்டான். இளநீரைக் கொஞ்சம் மேலாக இழுத்துபோட்டுக் கொண்டான். குறுக்காக ஒற்றையடிப் பாதையில் ஏறி மரங்களையும் செடிகளையும் சுற்றிக் கொண்டு சென்றான். ஒரு எருமை மந்தை தலையைத்தொங்கப்போட்டுக்கொண்டு மேய்ந்தபடி இருந்தது. அவைகளை அதட்டி ஓட்டிக் கொண்டு நடந்தான். தன் சப்தமே தனக்குத் தெம்பு தருவது போல் இருந்தது. இன்னும் உரத்தக் குரலில் மாடுகளை விரட்டிக் கொண்டு சென்றான். குறுக்கு வழி முடிந்ததுமே புளியமரங்களுக்குப் பின்னால் தன்னுடைய ஜனங்கள் நிற்பது இவனுக்குத் தெரிந்தது. இவன் நடையில் ஒரு துள்ளல் உண்டாயிற்று. வலது தோளிலிருந்து இடது தோளுக்கு இளநீரை மாற்றிக் கொண்டான். புளிய மரந்தைத் தாண்டி மண் நிறைந்த சாலைக்கு வந்தான்.

சாலையோடு சென்று கொண்டிருந்த ஒருத்தி இவனைப் பார்த்ததும் அடையாளங் கண்டு கொண்ட பெருமிதத்தோடு "இங்க அதை கொடு குழந்தே" என்று கைகளை நீட்டினாள்.

இவன், "ஹூம்" என்று மறுத்துரைத்து வேகமாக நடைபோட்டான். கொஞ்ச தூரத்தில் தண்ணீர் குடத்துடன் அக்கா சென்று கொண்டிருந்தாள். அவளைப் பிடிக்க இவன் நடை துரிதமாயிற்று. இவன் நெருங்க நெருங்க முனீஸ்வரன் மரத்தடியில் இருந்தவர்கள் எல்லோரும் நன்றாகத் தெரிய ஆரம்பித்தார்கள். பெண்கள் ஒரு பக்கத்தில் கூட்டமாக உட்கார்ந்து கொண்டு இருக்கிறார்கள். அத்தை எல்லோருக்கும் பூ கொடுக்கிறாள். பூஜைக்கு வேண்டிய காரியங்கள் தொடங்கி விட்டனபோல் இருந்தது. நடை மிகவும் வேகமாக — இவனுக்கே ஆச்சரியமளிக்கும் விதத்திலும் விழுந்தது.

அழகு குளத்து முகப்பில் இவனைக் கண்டதும், "நீயா இதையெல்லாம் தூக்கியாறே. வேற ஆளு இல்ல" என்று கேட்டார்.

இவனுக்கு எரிச்சலாக இருந்தது.

"இங்க கொண்டா"

"வேண்டாம் தாத்தா"

"என்ன வாணும்" அவர் கை இவன் பக்கம் நீண்டது.

இவன் உடலை நெளித்து முன்னால் சென்று, "இன்னும் வண்டி வர்லீயா தாத்தா?" என்று கேட்டான்.

"அதத்தானே பாத்துக்கிட்டு இருக்கேன்: நீ வண்டியில வரேன்னு உங்க ஆயா சொன்னா. என்னடான்னா நடந்து வர்றே"

இவன் ஆச்சரியமுற்றான். இவனுக்கு முன்னே புறப்பட்ட வண்டி. இன்னும் வந்து சேரவில்லை. இவன் நடந்து வந்து விட்டான். இப்போது இளநீரும் வாழைச்சருகும் கனமே இல்லாமல் இருப்பது மாதிரி இவனுக்குத் தோன்றியது.

"எல, அந்த எலக்கட்ட இப்படிக்கொடு" அழகு கரம் நீண்டு எடுத்துக் கொண்டது. இவன் திரும்பி அவரைப் பார்த்தான். பெரிய பற்கள் தெரியச் சிரித்தார். அவர் பல்லை பெரிய கல்லால் உடைக்கவேண்டும்போல் இவனுக்கு இருந்தது. கூடவே இளநீரையும் பிடுங்கிக்கொண்டு விடுவாரோ என்ற பயமும் உண்டாயிற்று. இவன் வேகமாக ஓடுவது மாதிரியே சென்றான்.

குளித்துவிட்டு கரை ஏறிய பெரியம்மா, "வாடா, நீயா இதைத் தூக்கியாறே. வேற ஆளு இல்ல—" என்று கேட்டாள்.

இவன் பெருமிதத்துடன் தலையசைத்தான்.

"கனமே இல்ல பெரியம்மா"

"உம்" அவள் புன்னகை பூத்தாள்.

இவன் தலே குனிந்து கொண்டான்.

"இங்க கொடு" இளநீரை எடுத்துக்கொண்டு "மாமா உன்னைத் தேடிக்கிட்டு இருக்காங்க. அதோ இருக்காங்க பாரு" என்று கையைக் காட்டினுள். இவன் தலே அசைத்தான். மாமா பக்கமாக நடந்தான்.

மாமா நீல ஜமக்காளம் விரித்து, கால் மேல் கால் போட்டுக்கொண்டு உட்கார்ந்திருந்தார். அவர் பக்கத்தில் இப்படியும் அப்படியுமாக ஒரு பத்துப் பன்னிரண்டு பேர்கள். நடுவில் ஒரு பெரிய வெற்றிலேத் தட்டு, வெள்ளித் தட்டு. அதில் வெற்றிலேயும் சீவலும் நிரம்பி வழிந்தன.

ஆண்டி கைநிறைய சீவலே அள்ளிக் கொண்டே, "வாங்க மாப்பிள, எங்க காணுல—" இவனேப் பார்த்து கண்களேச் சிமிட்டினர்.

எல்லோருடைய பார்வையும் இவன் மீது விழுந்தது. இவனுக்கு வெட்கமாகப் போய் விட்டது. கண்களேத் தாழ்த்தி மாமாவைப் பார்த்தான். கீழ் உதட்டில் வெற்றிலே எச்சில் வழிய வழிய இவனேப் பார்த்துத் தலேயசைத்து புன்னகை பூத்தார். இவன் மெல்ல பின்னுக்கு நகர்ந்தான்.

ஆண்டி இவன் கையைப் பிடித்திழுத்து, "மாப்பிளக்கு வெக்கம் வந்துடுச்சு. நீ இப்படிக் குந்து மாப்பிள" என்று தன் மடியில் உட்கார வைத்துக் கொண்டார். அவர் கை இவன் தலேயை வருடியது. இவன் அவர் கையில் சறுக்கிப்போகும் தங்கக் காப்பையே பார்த்துக் கொண்டிருந்தான்.

"அத்தான், சுருட்டு இருக்கா" இவன் மாமா கேட்டார்.

"மாப்பிளக்கு இல்லாமலா" சாமிக்கண்ணு துணிப் பையை மடியிலிருந்து எடுத்து தரையில வைத்துப் பிரித்து, ஒரு சுருட்டை யெடுத்துக் கொடுத்தார்.

இவன் மாமா பக்கம் நகர்ந்து, தன் பையிலிருந்து ஒரு கட்டு சுருட்டை எடுத்து முன்னே வைத்தான்.

"பத்தரமா வச்சுக்கோ, அது சாமிக்கு"

சுருட்டுக் கட்டை யெடுத்து மீண்டும் பையில் வைத்துக் கொண்டான்.

"மாப்பிளக்கு அத்தான் சாடை அப்படியே இருக்கில்ல" என்ருர் அழகு.

இவன் மாமா பதிலொன்றும் சொல்லவில்லே. அவர் பார்வை திரும்பி இவன் முகத்தில் விழுந்தது. ஒரு பெருமித சிரிப்பு—அவர் உதடுகளில் புரண்டு மறைந்தது.

"சாடை என்ன? அவுங்கதான் தம்பி. காது கண்ணு, மூக்கு—எல்லாம் அப்படியே இருக்கு"

எல்லோருடைய பார்வையும் இவன்மீது திரும்பியது. இவன் தலேகுனிந்து கொண்டு உட்கார்ந்திருந்தான். அவர்கள் பேச்சு யுத்த முனேயில் மரணமுற்ற இவன் தகப்பனுரைப் பற்றிச் சென்றது. இவனுல் அதைக் கேட்டுக் கொண்டிருக்க முடியவில்லே. மெல்ல ஜமக்காளத்தில் கையூன்றி எழுந்தான். யாரையும் பார்க்காமல் பின்னுல் நகர்ந்து ஓட ஆரம்பித்தான். மாமா சொன்னது வெறும் சப்தமாக இவன் காதில் விழுந்தது. இவன் துள்ளித் துள்ளி நொண்டி ஆடுவதுபோல குதித்துக் கொண்டு அத்தை இருக்கும் இடத்திற்குச் சென்ருன். அவள் எதிரே வந்து கொண்டு இருந்தாள். அவளேச் சுற்றி ஒரு கூட்டம். கையில் பானேகளும் தட்டுக்களும் கூடைகளுமாக.

வண்டி ஒரு பக்கத்தில் அவிழ்த்துக் கிடந்தது. இவன் அத்தையோடு போய் ஒட்டிக் கொண்டான். அவள் வர்ணப் பூச்சுக்கள் நிறைந்த ஒரு பானேயை இவனிடம் கொடுத்தாள். இவன் பானேயைத் திருப்பித் திருப்பிப் பார்த்துக்கொண்டே நடந்தான்.

இவர்கள் நடக்க நடக்க ஜமக்காளத்தில் உட்கார்ந்திருந்தவர்கள் எழுந்து நின்று கொண்டார்கள். பெண்கள் நடக்க ஆண்கள் பின்னுல் வர எல்லோரும் முனீஸ்வரன் மரததை நோக்கி மௌனமாக நடந்தார்கள். முன்னே செல்லச் செல்ல நடையில் தொய்வு ஏற்பட்டு நிற்பதுபோல் இருந்தது. எப்போதோ கூவும் பறவையின் ஒலியோடு இவர்கள் மெல்ல அடியெடுத்துவைத்தார்கள். மரத்தின் அருகே சென்றதும், திடீரென்று

ஒரு பெருங்காற்று கிளம்பி மரத்தை உலுக்கி, கிளைகளுக்குத் தாவி தழைகளை உதிர்த்துக் கொண்டு சென்றது.

“ஐயாவே”

“அப்பனே, முனியாண்டி”

பட்டை பட்டையாகத் திருநீறு பூசிக் கொண்டு ஈரவேட்டியை மடித்து கோவண மாகக் கட்டிக்கொண்டு மார்பில் குறுக்காக மாலை போட்டுக்கொண்டு முனிஸ்வரன் சூலத் தின் முன்னே நின்று கொண்டிருந்த பூசாரி, “ஆ” என்று துள்ளிக் குதித்தான். கைகளைத் தரையில் ஊன்றி ஒரு சுற்றி வந்தான். குறுக்குமாலை கையில் சிக்கிக் கொண்டது. கையை உதறிக் கொண்டான். இரண்டடி பின்னே வந்து நின்று விழிகளை மூடாமல் மரத் தையே பார்த்துக் கொண்டிருந்தான். அவன் பார்வை அப்படியே நிலைத்திருந்தது. எல் லோரும் பானைகளையும் கூடைகளையும் கீழே வைத்து விட்டு அண்ணாந்து பார்த்தபடியே இருந்தார்கள்.

“முனி வந்துடுச்சு”

பூசாரி ஒரு மிடுக்குடன் திரும்பி சூலத் தின் கீழே சடெரென்று விழுந்து கை கூப்பித் தொழுதான்.

இவன் ஒன்று, இரண்டு, மூன்று என்று மனத்துக்குள்ளே எண்ணிக்கொண்டே இருந் தான். பூசாரி கால்களை இணைத்து நீட்டிய படியே கிடந்தான். இவன் பதினைந்து என்று எண்ணும்போது அவன் எழுந்தான். இவன் கொண்டுவந்து வைத்த பானையை எடுத்துக் கொண்டு ஓட்டமும் நடையுமாகக் குளக்கரை குச் சென்றான்.

ஒரு குடம் தண்ணீர் கொண்டு வந்து சூலத்தில் ஊற்றினான். நீர் சூலத்தில் விழுந்து நாலாபக்கமும் சிதறித் தரையில் இழிந்து ஒரு வாய்க்காலாய் உருப்பெற்று காலைநோக்கி ஓடி வந்தது. இவன் மெல்ல தன் காலைத் தூக்கி அதில் வைக்கப் போனான். மாமா தலையசைத் துத் தன் பக்கமாக இவனை இழுத்துக்கொண் டார். இவன் பார்வை சூலத்திலிருந்து விலகி எதிர்ப்பக்கம் சென்றது. மாடு மேய்க்கும் சிறுவர்களும் சாணி பொறுக்கும் சிறுமிகளும் மிகுந்த அட்க்கத்துடன் வரிசையாக நின்று கொண்டிருந்தார்கள். ஒரு கருத்த பையன் எருமை மாட்டின்மீது சவாரி செய்துகொண்டு வந்தான்.

பூசாரி சூலத்திற்கு ஒரு பெரிய மாலையை எடுத்துச் சாத்தினான். மாலை சூலத்திலிருந்து தரையில் புரண்டு கொண்டிருந்தது. தன் உயரத்திற்கு மேலே மாலை இருக்குமென்று இவன் நினைத்துக் கொண்டான். தான் இந்த மாலையைப் போட்டுக் கொண்டால்கூட தரை யில் கொஞ்சம் புரளும் என்று சொல்லிக் கொண்டான். தரையில் புரண்ட மாலையை எடுத்துச் செங்கல் மேல் வைத்துவிட்டு,பெரிய முனிக்கு எதிரே உள்ள பனைமரத்தடியில் இருக்கும் சின்ன முனியின் கீழ் ஒரு புதிய செங்கலை நட்டு திருநீறும்,சந்தனமும, குங்கு மமும் பூசினான். அவனுடைய ஒவ்வொரு செயலையும் இவன் விசித்திரமாகப் பார்த்துக் கொண்டிருந்தான். பூசாரியின் வாய் இடை விடாது முணு முணுத்துக் கொண்டிருந்தது. அதில் அவ்வளவும் இவனுக்குக் கேட்கா விட்டாலும் சில கணங்களில், ‘எங்கள் குலம் தழைக்க வந்த முனியே ... ஆதிமுனியே ஐயாவே...அப்பனே...’ என்ற வார்த்தைகள் கடல் அலையைப்போல் தோன்றி சீறிக் கொண்டு வந்தன.

பூசாரி நடக்காமல் ஓடுவதையும் பேசாமல் பொறுமுவதையும் இவன் ஆச்சரியத்தோடு கவனித்துக் கொண்டிருந்தான். இவனுடைய தாழ்ந்த பார்வை தன் கூட்டத்தில் படர்ந்தது. ஒவ்வொருவரும் கிட்டத்தட்ட தன்னை மறந்த நிலையில் முனியின் பக்தியில் அமிழ்ந்து கொண்டிருப்பது போல இருந்தது.

சூலமும் பூமாலையும் முனிமரமும் குளமும் மனத்திலிருந்து மறைய, இந்த நேரம் வகுப் பில் என்ன நடக்கும் என்ற நினைப்பு இவ னுக்கு வந்தது. மணவாள ஐயங்கார் கணக் குச் சொல்லிக் கொடுத்துக்கொண்டு இருப் பார். வேலுசாமி கணக்குத் தப்பாகப் போடு வான். “ராமு, அவனுக்கு ஒண்ணு கொடுத்து கணக்கச் சொல்லு” என்பார். இவன் மெது வாகக் குட்டுவான். அவர், ‘இங்க வா’ என் பார். சிரித்துக்கொண்டே அருகில் செல்லு வான். ‘குட்டச் சொன்னா தடவியா கொடுக் கற’ அவர் பிரம்பு இவன் முதுகில் மெல்ல அடிக்கும். சங்கரன் குதித்துச் சிரிப்பான். ‘இப்படித்தான் சார், அவனும் குட்டினான்—’ என்பான். அவனைத் தொடர்ந்து ராஜா, பிச்சைக்குட்டி, சற்றைக்கெல்லாம் கணக்கு வகுப்பு சிரிப்பில் மிதந்து, மறுபடியும் சம நிலைக்கு வரும். மணவாள ஐயங்கார் பிரம்பை மேசையில் தட்டி, கணக்கைச் சொல்லுவார்...

“அண்ட சராசரம் காக்கும் ஆதி முனியே

வால் முனியே.

அப்பனே.

முனியாண்டி...'' பெரும் முழக்கத்தோடு பூசாரி நீண்ட வாழை இலையை எடுத்து விரித்தான். பெரிய இலை நீளம் மாதிரியே அகலமாகவும் இருந்தது. கிழிசல் ஏதும் இல்லாமலும் இருந்தது.

இவன் நினைவின் இழைகள் அற, கனவுலகம் போன்ற காட்சி மறைய தன் முன்னே நடப்பதைப் பார்க்கலானான். ஒரு பானை சோற்றையெடுத்துக் கொட்டி உயர்ந்ததைத் தன் கையால் கிளறி விட்டான். ஆட்டுக்கறி குழம்பை அதில் கொட்டினான். ஒரு தொடை முழுதாகக் கிடந்தது. ஒரு சட்டியில் ஆட்டு ரத்தம். அந்தப் பக்கம் பரங்கிக்காய் கூட்டு; முருங்கை இலைப்பொறியல்: இந்தப் பக்கம் கோழி; சேவல் கோழி. பெரிய கோழி. தங்கத்தினுடையது. இவன்தான் பிடித்துக்கொண்டு வந்தான். பிடித்து மார்போடு அணைத்துக் கொண்டு வந்தபோது புரண்டு கீறி கேவிக் கொண்டோடிய கோழி கறியாகிவிட்டது. ஒரு சின்ன கலயத்தில் கள், தென்னங்கள்.

பூசாரி கைகளைப் பின்னுக்குக் கட்டிக் கொண்டு இலையை நோட்டமிட்டான். தலையைக் கொஞ்சம் தாழ்த்திக்கொண்டு ஒவ்வொன்ருகப் பார்த்தான். ஏதோ குறைவது போல் அவனுக்கு இருந்தது. என்னவென்று சட்டென்று நினைவுக்கு வராதவன் போல தவித்தான். ஒரு முறை இலையைச் சுற்றி வந்தான். பின்பு திடீரென்று மாமா பக்கம் திரும்பி, ''எங்க, சுருட்டு'' என்ருன்.

அவன் குரல் ரொம்பவும் மாறி, வழக்கம் போல் இல்லாது இருப்பதாக இவனுக்குத் தோன்றியது. என்ன மாறுதல் என்று தெரியவில்லை. ஆனல் மாறி இருப்பதாகத் தோன்றியது.

மாமா அத்தையை அந்தக் கூட்டத்தில் தேடினர். அவள், ''கொடுத்து அனுப்பினேனே, ஆண்டியைக் கேளுங்க'' என்று சொல்லிக்கொண்டே முன்னே வந்தாள்.

''வரட்டும்'' ஒரு அதட்டல் போட்டுக் கொண்டு, குனிந்து உடுக்கையை எடுத்து கணீரென்று ஒரு சப்தத்தை உண்டாக்கினன் பூசாரி. திடீரென்று உடுக்கையிலிருந்து எழுந்த சப்தத்தில் அனைவரும் இனங்கண்டு கொள்ளமுடியாத ஒரு தாக்குதலுக்கு உள்ளானர்கள்.

மாமாவின் கையிலிருந்து நழுவி இரண்டடி முன்னே சென்று பூசாரியிடம் சுருட்டுக் கட்டைக் கொடுத்தான். இவனை, அவன் ரொம்பவும் விசித்திரமாகப் பார்த்தான். கறுத்து வியர்வை வடியும் அவன் முகத்திலிருந்து ஒரு புன்சிரிப்பு வெளிப்பட்டது. இவனிடமிருந்து சுருட்டை வாங்கிக்கொண்டு, உடுக்கையை ஒரு குலுக்குக் குலுக்கி இவன் காதருகில் ஒரு தட்டுத் தட்டிப் பெரிதாகச் சிரித்தான். அவனுடைய சிரிப்பு, இவன் மனத்தினுள் இடி மாதிரி சென்று பாய்ந்தது: அங்கிருந்து சரசரவென்று கீழே கால்கள் வழியே இறங்குவது மாதிரி இருந்தது. கைகளை நெஞ்சில் குறுக்காக வைத்துக்கொண்டு மாமாவுக்குப் பின் மறைந்து கொண்டான்.

வால்முனிக்கு சுருட்டை வைத்துவிட்டு, ஒரு சுருட்டை எடுத்துக்கொண்டு சின்ன முனிக்கு வைக்க பூசாரி கூட்டத்தைப் பிளந்து கொண்டு சென்ருன். சென்ற அதே வேகத்தில் கால்களில் சலங்கையொலிக்க, கையில் உடுக்கை முழங்க வாயில் முனியின் நாதம் ஒலிக்க, மாலைப் பூக்கள் உதிர மெல்ல ஆடிக் கொண்டு வந்தான். இவன் மாமாவின் பின்னே இருந்து பார்த்தான். தன்னை அவன் இழந்து கொண்டு வருவதுபோல் இருந்தது.

பூசாரி முனியின் முன்னே நின்று தனக்குத் தானே ஏதோ சொல்லிக் கொண்டிருந்தான். அவனுடைய மௌனம் எங்கும் பரவி அனைவரையும் பேச்சின்றி இருக்கவைத்தது. ஒவ்வொருவர் பார்வையும் அவன் மீது பாதியாகவும், முனீஸ்வரன்மீது பாதியாகவும் படிந்திருந்தது.

அவன் இருந்தாற்போல இருந்து, ''ஹா...ஹா...'' என்று ஒருமுறை துள்ளிக் குதித்து, கைகளை வீசி, ஒரு சுற்று சுற்றி உடுக்கையைத் தட்டினன். அவன் கூக்குரலிலும், உடுக்கையின் சப்தத்திலும் சுற்றுப்புறம் விசித்திரமாக மாறியது. புளிய மரத்தில உட்கார்ந்திருந்த காகங்கள் ஒன்ருக எழுந்து தங்களை மறந்து கத்திக்கொண்டு சென்றன. பின்னல் நின்று வேடிக்கைப் பார்த்துக்கொண்டிருந்த பிள்ளைகள் தங்களை அறியாமலேயே பின்னுக்கு இன்னும் நகர்ந்துகொண்டனர் ஆண்களை விட்டுக் கொஞ்சம் தள்ளி நின்றுகொண்டிருந்த பெண்கள் ஒருவிதமான பயத்துடன் ஆண்கள் பக்கம் சேர்ந்து கொண்டார்கள். இவன் மாமா கையை இறுகப் பற்றிக் கொண்டான். அவர் குனிந்து இவனைப் பார்த்துப் புன்னகை பூத்தார். அந்தப் பக்கமாக முகத்தைத் திருப்பிக் கொண்டான். மனத்தில் பொங்கிக் கொண்டிருந்த மகிழ்ச்சியும் உற்சாகமும் கலவரத்தில் மங்கிக்கொண்டு வருவது போல் இருந்தது. கண்களை இறுக மூடிக்கொள்ளலாம் போல் இருந்தது. முகம் சுளிக்கக் கண்களை மூடிக்கொண்டான். ஆனலும் பூசாரி மாலைகள் குலுங்க ஆடுவதும்,

உடுக்கை சப்தத்தை அலையாகப் பெருக்குவதும் இன்னும் சமீபத்தில் கேட்பதுபோல் இருந்தது. இந்தச் சூழலே விசித்திரமான கலவையின் தோய்வாக மாறிக்கொண்டு வருவது போலிருந்தது. மெல்ல தலையை உயர்த்திப் பாதி கண்களைத் திறந்து மாமாவைப் பார்த்தான். கண்களை மூடிக்கொண்டு, கரம் கூப்பியபடி இருந்தார். இவன் பார்வை மாமா மேலிருந்து இறங்கி, ஒவ்வொருவர் மேலும் படர்ந்தது. தன்னைத் தவிர மற்றவர்கள் அனைவரும் முனியில் தோய்ந்துகொண்டு வருவதுபோல இவனுக்குப் பட்டது.

ஓரடி முன்னே வந்து, கண்களை நன்றாகத் திறந்து பார்த்தான். பூசாரி முன்னே வந்து விழுந்த குறுக்கு மாலையைப் பின்னுக்குத் தள்ளிக்கொண்டு.

"முனியே, வால் முனியே
ஆதி முனியே எங்க அப்பனே
ஐயாவே எங்கள் குல நாயகரே
எலந்த மரம் விட்டு இறங்கி வரவேணும்
ஒதிய மரம் விட்டு ஓடி வர வேணும்
பனைமரம் விட்டு பாய்ந்து வரவேணும்
இலுப்பை மரம் விட்டு இங்க வரவேணும்
இப்ப வரவேணும் சாமி .. இப்ப
வரவேணும்
இங்க வரவேணும் சாமி இங்க வரவேணும்
காத்திருக்கும் பிள்ளைகளைக் காக்க
வரவேணும்..."

அவன் ஹா... ஹா... என்று அலற, உடுக்கு பீம் என்று முழங்கியது. பூமியிலிருந்து எழும்பிக் குதித்து, தலையை வேகமாக அசைத்தான். ஒரே ஓட்டமாக சின்ன முனிவரையில் ஓடினான். பல்லைக் கடித்துக் கொண்டு பிதுங்கிய விழிகள் வெளியே வருவதுபோல் தோன்ற, "—என்ன இடக்கு... வழியை மறிக்குதா ஐயா—" என்று பீம் பீம் என்று அடித்தான். இடியாய் பெருகி எங்கும் நிறைந்த சப்தம் திடீரென்று நின்றது. அவன் உடுக்கையைக் கையில் பிடித்துக் கொண்டு ஒரு நிமிஷம் தெற்கு முனையையே பார்த்துக் கொண்டிருந்தான். கண்கள் ஏறி இறங்கின. இரண்டடி பின்னுக்கு நகர்ந்தவன், திடீரென்று முன்னே பாய்ந்து முனீஸ்வரன் எலுமிச்சைப் பழத்தையெடுத்துத் தலையைச் சுற்றி, "துரையை துஷ்டன் மறிக்கிறானா?" என்று வீசியெறிந்தான்.

பூசாரி திரும்பி வந்தான். இவன் பார்வை அவன் மீது விழுந்தது. இப்போது அவனே முனீஸ்வரன் மாதிரி இவனுககுத் தோன்றியது. அத்தை முன்னிரவில் கதைகளில் சொன்ன முனி போலவே தலை முடி கலைந்து பறக்க கால் தரையில் பாவாமல் சலங்கை ஒலிக்க தாவிக்கொண்டிருந்தான். அவன் கை நீளுகையில் தன்னைப் பிடித்து இழுத்து அணைத்துக்கொள்ளுவான்போல் இவனுக்குத் தோன்றியது. மெதுவாக—ஒவ்வொரு அடியாகப் பின்னுக்கு எடுத்துவைத்துநகர்ந்தான். பின்னுக்குச் செல்லச் செல்ல உடுக்கையின் சப்தமும் பூசாரியின் வேண்டுதலும் தொடர்ந்து வந்து கொண்டே இருந்தது. சப்தம் கனத்து செவியில் இறங்கி, மனத்தில் பாய்ந்து தடுமாற வைப்பதுபோல் இருந்தது. இவன் கால்கள் இன்னும் இன்னுமென்று பின்னுக்குச் சென்றன. தனக்கு மட்டுமே கேட்பது மாதிரி உடுக்கை கேட்டுக்கொண்டிருந்தது.

இவன் திரும்பி, குளத்துப் பக்கம் சென்றான். சேரித்துறையில் இரு பெண்கள் துணி இல்லாமல் குளிப்பது தெளிவில்லாமல் தெரிந்தது. குளத்தில் இவன் இறங்கினான். ஒரு கெண்டை மீன் துள்ளித் தாவியது. அதன் சப்தத்தில் நீர்கோழி வேகமாக மூழ்கியது. இவன் கொஞ்சம் நகர்ந்தான். பூத்த செவ்வல்லி கூம்பிக் கொண்டிருந்தது. ஒரு கையால் தண்ணீரைத் தள்ளிப் பூவை இழுத்துச்சொடுக்கிப்பிடுங்கினான். செவ்வல்லி நீண்ட தண்டுடன் வந்தது. அதைத் தோளில் மாலையாகப் போட்டுக் கொண்டுத் திரும்பியபோது தூரத்தில் ரயில் ஓசை கேட்டது. இன்னும் சற்றைக்கெல்லாம் ரயில் தெரியும் என்று நினைத்துக் கொண்டு கரைக்கு வந்தான். இவன் பார்வை வளைந்து செல்லும் தண்டவாளத்தின்மீது பதிந்தது. இவன் பார்த்துக் கொண்டே இருக்கையில் கருப்பாக ரயில் எஞ்சின்மட்டும் புகையை விட்டுக்கொண்டே சென்றது. இவனுக்கு ஏமாற்றமாக இருந்தது. பையில் கையை விட்டான். சுருட்டு தட்டுப் பட்டது. உடனே முனியின் நினைவு படர்ந்தது. முன் நோக்கி நடந்தான்.

"—வாரும். சீக்கரமாக வாரும். ஐயாவே வாரும்... ஹூம்" ஆடிய அவன் கால்கள் நின்றன. தலையைச் சாய்த்துக் கொண்டு, விழிகள் குத்திட இவனைப் பார்த்தான். இவன், அவன் பார்வையில் பட அஞ்சியவன் மாதிரி தலையைத் தாழ்த்தி அத்தையைப் பார்த்தான். அவள் ஆடிக்கொண்டிருந்தாள்.

கடைவாயில் எச்சில் ஒழுகிக்கொண்டிருந்தது. அவள் கூட அஞ்சலை தலைவிரி கோலமாக உருண்டு கொண்டு இருந்தாள். அவள் உருண்டு இவன் காலடிக்கு வந்தாள். கை இவன் காலைத் தீண்டுவது போல் இருந்தது. இவன் திடுக்கிட்டுப் போனான்.

ஆறு தாண்டி அதிராம் பட்டினம்
தாண்டி
காடு தாண்டி காவேரிப் பட்டினம்
தாண்டி
கூந்தபனை விட்டு
கொடிக்கால் தாண்டி
ஆறு கடந்து, ஆகாச குதிரையில்
வேட்டை நாய் தொடர
சேவகர்கள் தொடர்ந்து வர
சலங்கையொலிக்க ஜாதிமுத்து மணக்க
விண்ணுக்கும் மண்ணுக்கும் ஒண்ணாய்
வீராதி வீரர்; ராஜாதி ராஜா—''

அவன் இவனை நோக்கி நடந்தவாறு உடுக்கையின் கயிற்றை இறுகப்பற்றித் துரித கதியில் உடுக்கையை அடித்தான். இவன் இனந் தெரியாத கலவரத்தோடு அத்தையை யும் பூசாரியையும் மாறி மாறிப் பார்த்தான். அவர்கள் ஆடிக் கொண்டு இருந்தார்கள். திடீரென்று இவன் பார்வை மாமாவைத் தேடியது. தன் கால்கள் தரையில் பாவாமல் மேலே போவதுபோல தோன்றியது. யாரோ ஒருவர், மாமனுக்கு ஆகாதே என்று அவசர மாக இவன் கழுத்திலிருந்த அல்லிக் கொடியை எடுத்தெறிந்தார்கள். கால்களை ஓங்கித் தரையில் உதைத்தான். தன்னைச் சுற்றி உள்ள அனைத்தும் கவிந்து வரும் இரு ளில் மெல்ல அமிழ்வதுபோல இருந்தது. எதையும் தீர்மானிக்க இயலவில்லை. சூழ்ந்து வரும் இருளிலும் ஒரு வெள்ளைக் கழுகு வானி லிருந்து நேராகக் கீழே இறங்குவதின் நிழல் தன் மேல்படர்வது போல் இருந்தது. இவன் மேனி சிலிர்த்து. நடுங்குவது போல் இருந் தது. ஒரு துள்ளலுடன் ''மாமா'' என்றான். இவன் குரலொலியை மிஞ்சிக் கொண்டு உடுக்கையின் சப்தம் எங்கும் பரவியது.

இவன் நடுங்கிக் கொண்டே கீழே சாய்ந் தான். நீண்ட இவன் கரம் முனீஸ்வரன் சூலத்தைப் பற்றியது. ●

---

# விழமுடியாத படங்கள்

கல்யாண்ஜி

தன்னுடைய சாதாரண காமெராவின் சக்தியைத தாண்டின மாலைப் பொழுதில் அந்த டூரிஸ்ட் பஸ்ஸிலிருந்து அவன் இறங் கினான். 'கடைசியும் ரம்மியமுமிக்க கோகு லத்தை நோக்கி நாம் போய்க் கொண்டிருக் கிறோம் நண்பர்களே. அதற்கு முன்னால்.....! என்று ஆரம்பித்து தான் ஒரு கைட்—அல்ல வென்றும், இன்ன பெயருடைய இன்ன கல்லூரியில் இந்த வகுப்புப் படிக்கும் அவனு டைய குடும்பத் தேவைக்கான பார்ட்—டைம் வேலையான இதற்கு—'என் அருமை நண்பர் களே, தாராளமாக உங்களுடைய வால்யுபில் டிப்ஸ்தாருங்கள்' என்று ஒவ்வொரு சீட்டாக ஆரம்பித்துக் கேட்க வரும்போதே வெயில் தாழ்ந்துவிட்டிருந்தது. 'ஜனங்களை நிரந்தரப் படுத்துங்கள்' என்ற விளம்பர வாசகம் உறுத் தலாக ஞாபகம் வர, அவனுடைய அன்பான காமராவைத்திருப்பிப்பார்த்தபடி, தன் அருகில் தூங்கிக் கொண்டே அல்லது கொரித்துக் கொண்டே வந்தவருக்கு இந்தக் கடைசிப் பொழுதில் அறிமுகமாகிக் கொள்வதைப் போலப் புன்னகைத்தான். முந்தின சீட் ஜோடியின் மிகநேர்த்தியான பிம்பம் கருப்பு கண்ணாடியில் தெரிந்தது. இந்த டூரிஸ்ட் கோச்சின் டபிள்—ஸீட்களில் அமர்ந்திருந்த ஜோடிகளின் பொருத்தத்தை, இன்மையைப் பகிர்ந்து கொள்ளக்கூட முடியாத அளவுக்குத் தான் தனியாகவந்துவிட்டதிற்குவருந்தினான், அப்படிப் பகிர்ந்து கொள்வது அவன் வழக்கத் தில் உண்டா என்றும் யோசிக்க நேர்ந்தது.

வெயில் வேகமாக மங்கி நிழலின் நிறமே வெயிலின் நிறமாகிக் கொண்டிருந்தது. நாம் கோகுலத்திற்குள் நுழைவதற்கான அனு மதிச் சீட்டுகளைப் பெறும் நேரத்திற்குள், எங்களின் வார இறுதி விருந்தாளிகளே, மேன்மை தங்கிய பயணிகளே சற்று இளைப் பாறிக் கொள்ளுங்கள் — எதிரே ரெஸ்டா ரெண்ட். நீங்கள் பணம் கொடுத்து, நீங்களே சேர்வ் செய்து கொண்டு, கண்டிப்பாக நீங்கள் சாப்பிட்டாக வேண்டும். பதினைந்து நிமிஷம் பதினைந்தே நிமிஷம் என்று கைட் ஜோக் அடித்துச் சிரித்தபோது எரிச்சல் வந்தது. தன் ஊரில் எக்ஸிபிஷன் விளம்பரம் சொல்கிறவன்

குரல் ஒரு முகம் போல முன்னுக்கு ஞாபகம் வந்தது.

இள நீலத்தில் ரோஸ் பூக்கள் அற்புதமான ஒரு விகிதத்தில் சிந்திக் கொட்டின சேலைக்காரியும் அவளின் கணவனும் போகிற நிழலின் சரிவு கூடத் திடமான கருப்பில் இல்லை. மெலிந்துவிட்டது. இந்த 'நீரூற்றுக் களின் அற்புதமான்'— (கைட்) — கோகுலத்தில் எடுத்துக் கொள்வதற்கென்று பிரத்யேகமாகச் சேமித்து மீந்து வைத்திருந்த மீதி ரோலுக்கு இனி நிச்சயம் பிரயோஜனமில்லை என்ற தீர்மானத்தில் அவனுக்குக் காப்பி தேவையில்லாமல் போயிற்று.

எந்தவிதக் கூர்மையான அட்ஜஸ்ட் மெண்ட்டுகளும் இல்லாத இந்தப் பெட்டி காமெராவின் மேல் இருக்கிற பிரியம் இம்மியும் குறையாத ஒரு வருத்தத்தில் அவன் கார் நம்பரையே பார்த்துக் கொண்டான். ஏறும் போதே வந்தனம் எல்லாம் கூறிவிட்டு, ஒரு குறிப்பிட்ட மியூஸியத்தின் முன் பல டூரிஸ்ட் கோச்களுக்கு மத்தியில் இதுவும் நிற்க வட்டமிட்ட போது பாதி எழும்பியும் எழும்பாமலும் கலகலத்த டூரிஸ்ட்களுக்கு, அந்தக் கோச்சின் நம்பரையும் பெயரையும் சொல்லி நினைவில் வைத்துக் கொள்ளச் சொல்லியிருந்தார்கள். நம்பர்களைவிட இவனுக்கு மனிதர்களைச் சுலபமாக நினைவில் வைத்துக்கொள்ள முடிந்தது.

ரொம்பவும் சிறுவன் — சிறுமியாகத் தோற்றமளித்த அந்த இருவரும் ரெஸ்ட்டாரண்டுக்கு வெளியே வந்து நின்று சாஸரை உறிஞ்சிக் கொண்டிருந்தார்கள். அவர்களுக்கு, மிகவும் கவர்ச்சியற்ற ஒரு தூங்கு மூஞ்சி ஒட்டகத்தின் பின்னணியில் ஜோடியில் தங்களைப் படம் எடுத்துக்கொள்ளத் தோன்றியதும் இவனை அவர்களுடைய காமராவால் ஒரு தடவை க்ளிக்கச் சொன்னதும் ஆச்சரியமாக இருந்தது. இப்போது அவர்களுடைய இயல்பான அவிழ்ந்து நிற்கிற சந்தோஷமான நிலையைப் படம் பிடிக்கத் தோன்றியது. பிடித்தான். இன்னும் ஐந்துதான் மிச்சம். அவை வீண் போகும். இருட்டின கோகுலத்தில் அவனுடைய காமாராவுக்கு வேலையில்லை. அவன் பார்க்க மட்டும் செய்யலாம்.

இரண்டு வெள்ளரிக்காய்ச் சீவலின் குளிர்ச்சியான காரத்தினை ரசித்தபடி, இனி அவர்கள் எப்போது வந்து, எப்போது கோகுலத்துக்குள் போனாலும் சரியென்று சந்தோஷமாகத் தயாராகிக் கொண்டான். எப்போதுமே பிந்தி—'ஸாரி ஜென்ட்ல் மென்' என்றபடி வருகிற ஜோடி பஸ்ஸில் கால் வைத்ததும், ஒரு கோஷ்டி தாளத்தோடு க்ளாப்ஸ் அடித்து "அப்...அப்" என்று வரவேற்றுக் கேலி செய்ய, 'தாங்க் யூ, தாங்க் யூ' என்று கோட்டை விலக்கி, மறு கையை அசைத்து அங்கிகரித்து அவர்கள் உட்கார்ந்தபோது அவன் மிகவும் மிருதுவாகி, தனிமையெலாம் கரைந்து அந்த பஸ்ஸின் பொதுவான சந்தோஷத்துள் ஐக்கியமாகி வெளியே பார்க்கத் தொடங்கினான்.

சிவப்பு, அம்பர், பச்சைக்காக வரிசை வரிசையாகக் காத்திருந்து மெதுவாக ஊர்ந்த கோச்சில் எல்லோரும் வெளியே பார்த்துக் கொண்டிருந்தார்கள். கண்டக்டர் தலை நிலைப்பின்றி ஆட, பாதி தூங்கினான். சுற்றிலும் பார்த்துவிட்டு மறுபடி மூடினான். மிகவும் இடுக்கமான பாதையில் போகவும் வரவும் செய்கிற வாகனங்களைவிட, இரண்டு ஓரங்களிலும் நடந்து செல்கிறவர்கள் அதிகமிருந்தனர். டிப்ஸ் வாங்கின கையோடு ரெஸ்டாரெண்ட் பக்கமே இறங்கிப் போய்விட்ட கைட் இப்போது இருந்தால் எப்படிப் பேசுவான் என்று அவன் கற்பனை செய்து கொண்டான். அவனுடைய குரலிலும் பாணியிலும் சுலபமாகப் பேசிவிட முடியும் என்று தோன்றியது.

மிகப் பெரிய பாலத்தின் கீழ் ஸாகரமாகப் பொங்கி நுரைத்துத் தண்ணீர் ஓடிக் கொண்டிருந்தது. இது நின்று நடந்து பார்க்க வேண்டிய ஒன்று என எல்லோருக்குமே தோன்றியிருக்கும். ஆனால் கண்டக்டரிடம் யாரும் சொல்லாமல் ஓரத்து ஸீட் வழியே தலை நீட்டிப் பார்த்துக்கொண்டு வந்தார்கள். யாருடைய கைக்குட்டையோ காற்றில் இஷ்டம் போலப் பறந்து தண்ணீர் பக்கம் தாழ்ந்தது. அதை வேண்டுமென்றுதான் யாரேனும் வீசியிருக்கவேண்டும் என்று இவனுக்குத் தோன்றியது. தண்ணீரை யொட்டிப் பறவை பறக்கிற காட்சிக்கு யாரும் விழைந்திருக்கலாம் இதன் மூலம். கம்பி கட்டின குறுகலான நடைபாதையில் சடசடவென விரைகிற முகங்களையே படித்துக்கொண்டிருந்தான். முகங்களில் இருக்கிற வித்தியாசத்தை அவனுக்குத் தண்ணீரில் காணமுடியவில்லை.

உயர உயரமான மரங்களில் இருள் இறங்கத் தொடங்கிக் கொண்டிருந்த பகுதியில் கோச் நின்றது. எல்லோரும் இறங்கட்டும் என்று இருந்தவன், ஒரு டிக்கட் பரிசோதகரைப் போலத் தன்னுடைய சகபயணிகளை நிதானமாகப் பார்த்தான். பஸ்ஸில் இருக்கையில் முகத்தை மறைக்காத பெண் இறங்கும்போது கோஷாவை இழுத்துவிட்டுக் கொண்டாள், கணவனிடம் இருந்த பையனை வாங்கி வலது பக்கம் ஏந்தியபடி. காமராவை ஏன் கொண்டுபோக வேண்டும் என்று தோன்றியது. எங்கே வைப்பது என்றும் புரியவில்லை. லெதர் கேஸைக் காமராவின் மேல் இறுக்கமாக, அதனுடைய பித்தான்

சத்தமாகப் பொருந்துவது கேட்கும்படி மூடித் தோளில் இட்டான். மற்றவர்களுக்குப் பின்னு லேயே போய்த் திரும்புவதா, தானுகச் சுற்று வதா என்று யோசித்தான். நடமாட்டம் பல வண்ணங்களில் அதிகமாகக் கூடிவிட்டது. மாறுபட்ட உடையணிந்த இந்த ஊர்ப் போலீஸ்காரர்கள் விசில் ஊதி ஊதிப் போக்குவரத்தை ஒழுங்கு படுத்தினர்.

கோகுலத்தின் ஆரம்பத்திலுள்ள பிரும் மாண்டமான ஏரியின் விளிம்பில் பாதுகாப் பாக நின்று கொண்டிருக்கையில், அவனுக்கு எல்லாமே மறந்து' போவதுபோல ஒரு உணர்வுண்டாயிற்று. படகில் வந்து இறங்கிக் கொண்டிருந்தார்கள். அங்குமிங்குமாய்த் தண்ணீரில் கிடந்த பாலத்தில் பெருவிரலை ஊன்றி ஒருவர்பின் ஒருவராக வந்து கொண் டிருந்தார்கள். முன்னுல் தன் படகில் இழுத்து இன்னெரு படகில் இருக்கிற நண்பர்களை மஞ்சு தவழ எடுத்திருந்த போட்டோவிற்கு நிறைய பிரிண்ட் போடுகிற அளவுக்குக் கிடைத்த கச்சிதம் இப்போது கிடைக்கவில்லை. விளக்குகள் எரிய ஆரம்பிக்கா விட்டாலும் இது இருட்டுதான்.

தோளைத் தட்டி நகரச் சொன்ன போலீஸ் காரரைப் பார்த்து எரிச்சல் வந்தது. பார்வை யால் அவரைக் குப்புற ஏரிக்குள் பிடித்துத் தள்ளிவிட்டு, சுண்ணும்பு அடித்து நடை பாதையெல்லாம் தெளிவுபடுத்தப்பட்டிருந்த பாதை வழியாய் நடந்தான்.

பூச்செடி வரிசைகளுடன் கோகுலத்தின் நீரூற்றுக்களுக்கான பாதை துவங்கியது. அவனுடன் அவனின் தேசமே தோளோடு நடப்பது போலவே இருந்தது. எல்லோரும் இங்கே சந்தோஷமாக மட்டுமே இருக்க முடியும் என்று தோன்றியது. இளையவர் களுக்கு மட்டுமே அனுமதி கொடுக்கப்பட்டது போல் எல்லோருமே வயதாலும் இளமையாக இருந்தார்கள். இடுப்பில் கைகோர்த்து, தோளை அணைத்து, சின்ன நாய்க்குட்டியை அவள் துரத்த, அவளை அவன் துரத்த— கூச்சல்களும் அங்கு குறைவாகவே இருந்தது.

படிப்படியாக உயரம் கூடிக்கொண்டே போகிற ஒவ்வொரு பீடத்திலும் விதம்வித மாய் நீரூற்றுப் பொங்கவிட்டிருந்தனர். ஒரு புள்ளியிலிருந்து பலவாய், பல புள்ளிகளி லிருந்து ஒரு புள்ளிக்காய், உயரமாய்த் தனிமையாய், குட்டையான நீள் வரிசையாய், கூடாரமாய், நெட்டைக் கழுகாக நிற்கிற ஊற்றின் காலடியில் பூவும் புதருமாய், பனிப் பனியாகத் தண்ணீர் சிதறிக்கொண்டிருந்தது. நடுவே முதலிலிருந்து கடைசிவரை கம்பள மாக மடிந்துமடிந்து நீர் வழிந்து கீழிறங்கிக் கொண்டிருந்தது.

மேலெல்லாம் நனைய, காமராவைக் கைபிடுக்கில் தொங்கலாக இறுக்கினபடி ஒரு ஊற்றின் பக்கம் நின்றபோது ஜிலீர் என்று அத்தனை நீரூறறுக்களிலும், கோகுலத்தின் அத்தனை திசைகளிலும் வெளிச்சம் பிறந்தது. வயிற்றுக்குள் கும்மென்று மேலாகப் பரவி, ஓர் சங்கீதம் போல ஏதோ ஓர் உணர்வு விம்மி எழுந்தது. 'இந்த அற்புதலோகத்தின் ஒளிப் புன்னகையைப் படமாக்கத் தன்னிடம் சக்தி வாய்ந்த காமரா இல்லை. இவர்கள் பாவிகள், சற்று முன்னே வந்திருக்கலாம்'— ஊற்றே வண்ணமாய்ப் பீச்சியடித்து உச்சியில் ஆயிரம் துளிகளாகக் காற்றில் இறங்குகிற குதூகலமான ஒரு புள்ளியைப் படுத்தவாறே வருந்தினுன். இதற்காகவே காத்திருந்தது போல் அங்கங்கே மின்னுகிற ஃப்ளாஷ்களும் நண்பர்கள் கோஷ்டியைப் படமெடுக்க மண்டி யிடுகிற காமெராக்காரரும், முன்னும் பின் னும் நகர்ந்து பின்னணி தேடுகிற ஒரு அரைக் காற்சட்டை வெள்ளைக்காரரும்...... அவன் உறையைக் கழட்டி வெறுமனே வ்யூ— ஃபைண்டரில் பார்த்துக் கொண்டான். பஸ் புறப்பட இருக்கிற அவகாசத்திற்குள் அவன் சாவதானமாக ஒரு முறைக்குமேல் எல்லா வற்றையும் பார்க்கவேண்டும். இந்த நேர உணர்வு தன்னை விரட்ட இடங்கொடுக்காமல் இருக்க முடியவில்லை. இவனேடு வந்த ஒரு குடும்பம் மேலே நின்றுகொண்டிருக்கிறர்கள். பஸ்ஸின் நம்பர் ஞாபகம் இருந்தும் ஒருமுறை சொல்லிச் சரிபார்த்தான்.

மேலே கூட்டம் அதிகமாக இருந்தது. உயரத்திலிருந்து நுனிவரை நீரும் ஒளியும் மலரமலரச் சிரிக்கிறதைப் பார்க்க அமைப் பான இந்த இடத்தில் எல்லோர்க்கும் அவர் கள் அறியாமலே பேச்சுக் குறைந்திருக்க வேண்டும். ஒரு மெத்தென்ற அமைதி இருந் தது. சில வண்ண பல்புகளை அவனல் ரசிக்க முடியவில்லை. இந்த சந்தோஷமான முகங்கள் இருந்து விளக்குகள் இல்லாவிட்டால் கூடத் தன்னுல் இந்தக் கோகுலத்தையும் நீரூற்றை யும் ரசிக்கமுடியும் என்று தோன்றியபோது தான் பிறிதொரு முறை வார நாட்களில் அல்லது பகலில் வர ஆசைப்பட்டான். ஆனல், 'இன்னும் ஒரு முறை' பற்றிய நம் பிக்கை அவனுக்கு இல்லை. தானே படம் எடுக்கப்போகிறோம் என்ற நம்பிக்கையில் வேண்டாம் என வாங்காதிருந்த, புரட்டிப் பார்த்த ஆல்பத்தில் இருந்த ஒரு புகைப் படம் இந்தக் கோணத்தில் இருந்து எடுக்கப் பட்டிருக்கும் என்று தீர்மானித்து இமைகளை அழுந்த மூடி ரசித்தான்.

தோளில் இருந்த காமராவைக் கழற்றி, கையில் தளர்ச்சியாக முறுக்கிப் பின்னி வைத்தபடி ஏறி வருபவர்களுக்கு எதிராக இறங்குவது உற்சாகமாக இருந்தது. எல் லோருமே புல்வெளியில் இருந்து சாப்பிடுகை யில், தானும் ஏதோ சாப்பிடலாம் போல இருந்தது. வளர்ந்த புற்களுக்கிடையில் கழிவுக் காகிதங்கள் அங்கங்கே கசங்கிக் கிடப்பது அந்த வெளிச்சத்திற்கு மத்தியில்

ஒரு கனவின் ஆரம்பம் பிடிபடாத பிசைவை உண்டாக்கிற்று. ஒவ்வொரு இடமாகப் பேசய் எதிர்பார்த்து நின்றுகொண்டிருந்த திடகாத்திரமான நாட்டு நாயால், திடீரென்று தன்னுடைய ஊர் முனிசிபல் பார்க்காக இது மாறிவிட்டது போலாயிற்று. எங்கே பண்டங்கள் வாங்குவது, தண்ணீர் குடிப்பது, ஒதுங்குவது என்று தெரியவில்லை. அடி வயிறு கனத்து நிரம்பியதுபோல ஒரு நெருக்கடியான உணர்வு வளர்ந்தது.

ஒரு அரைவட்டமாக கோகுலத்தின் சுற்று விளிம்பின் புல்வழியே நடந்து முடிந்த போது, அவன் சரியாக கோகுலத்தின் நடைபாதை வாசலுக்கு வந்துவிட்டிருந்தான். அவனுடன் வந்த வடக்கு-இளைஞர்கள் நடைபாதையின் இரண்டடி உயரத்தில் இருந்து புல்வெளியின் பக்கமாய் விழித்துக் கொண்டிருந்த ஃபோகஸ் விளக்கினடியில் வரிசையாகச் சந்தோஷத்துடன் குறுகி மிகவும் பிரயாசையோடு வெளிச்சத்தை ஏந்தியபடி போஸ் கொடுத்தனர். 'லெட் அஸ் ட்ரை, லெட் அஸ் ட்ரை' என்று அனுசரணையான தூரத்திற்கு நகர்ந்து கொணடிருந்தவன் கையிலிருந்த காமராவும் சாதாரணமாகத்தான் இருக்கவேண்டும்.

முயற்சி பண்ணுவதில் இவனுக்கு ஆர்வமில்லை. கடைசியாக ஒருமுறை தீர்க்கமாக மனதில் வாங்கிக் கொள்வதுபோல் கோகுலத்தைப் பார்த்துவிட்டு வேகமாக பஸ்ஸை நோக்கி நடந்தான். நிற்கும்போது அடிவயிற்றில இருக்கிற அவசரம் நடக்கும்போது கொஞ்சம் குறைந்ததாகத் தெரிந்தது. பல டூரிஸ்ட் கோச்சுளுக்கு மத்தியில் நின்று இடம் ஒதுக்கிக் கொணடிருந்த போலீஸ்காரர் மேல் காரணமில்லாமல் எரிச்சல் வந்தது. நியான் விளக்கில் பஸ்ஸின் நிறம்மாறிவிட்டது போலிருந்தது. நம்பர் சரியாக இருந்தும், இன்னும் நிறையப் பேர் வராவிட்டாலும், பஸ்ஸை ஸ்டார்ட் செய்யத் தள்ளிக் கொண்டிருந்தார்கள். நான்கு பக்கமும் தேடுகிற பார்வையுடன் உடல் ஒருமுறை சிலிர்க்க, கனத்து நிரம்பின அவஸ்தையுடன முன்னே சாய்ந்து தள்ளுவது கஷ்டமாக இருந்தது. காமாரா தோளிலிருந்து முன்னால் சரிந்து ஆடுவதையும் தடுக்க முடியவில்லை.

நகர்ந்த வாக்கில் உறுமித் துடிக்க ஆரம்பித்தவுடன், டூரிஸ்ட் பஸ்ஸின் கண்டக்டர் ஹார்ன் செய்து துரிதப்படுத்த ஆரம்பித்தான். பீடி பற்றவைத்தபடி ஒதுங்கி நின்ற அவனிடம் போய் எங்கே தின்பண்டங்கள் வாங்கலாம், தண்ணீர் குடிக்கலாம், தேவைக்கு ஒதுங்கலாம் என்று கேட்டான். கண்டக்டரின் பாஷைக்கு இவனுடைய ஆங்கிலம் ஒத்து வாராதபோது ஒரு விரலை வளைத்துக் காட்டினான்.

கண்டக்டர் காட்டின திசையில் திரும்பி மறுபடியும் நேராகப் போனபோது அந்த இடத்தின் நாற்றமே தன்னைச் சொல்லியது. கோகுலத்தின் விஸ்தீரணமான பரப்புக்குச் சம்பந்தமில்லாத அளவுக்கு மிகக் குறுகலானதும், சிறியதுமான அந்த இடத்தின் சதசதப்பையும் அருவருப்பையும் பாராமல் நூற்றுக் கணக்கானவர்கள் காத்திருந்தனர். காத்திருக்க முடியாதவர்கள் தங்களது அவசரத்தைப் பொறுத்து எந்தவித நாகரீகத்தைப் பற்றிய எண்ணமுமின்றி அவர்களுக்குச் சௌகரியப்பட்ட ஓரங்களில் அமர்ந்து ஈரப் படுத்தினர்கள். மிகக் குறைவாக வெளிச்சமிடப்பட்டிருந்த அந்த இடத்திலிருந்து கண்களின் கசிவைத் துடைத்தபடி காறித் துப்பிக் கொண்டு வந்தார்கள். நடந்தபடியே காற்சட்டையின் பித்தான்களைப் போட்டுக் கொண்டு வந்தார்கள். காலணிகளைத் தரையோடு அடித்து உதறிக் கொண்டார்கள்.

எழுந்து வருவதற்கு முன் மறுபடியும் அவனுக்கு உடம்பு குலுங்கியது. விலகி வந்ததும், கோகுலத்தின் எல்லா அழகுகளுக்கும் முதுகைக் காட்டியபடி இதைப் படம் எடுக்கவேண்டும் என்று மனதார விரும்பிய வகை தன்னுடைய காமராவைச் சரிசெய்ய ஆரம்பித்தபோது அவை விழாது என்று அவனுக்குத் தோன்றவில்லை. ●

---

# காப்பு

**சார்வாகன்**

''ஏண்டி மினியம்மா அழுவறே?''

எட்டிப் பார்த்தேன். பர்மா ஷெல் பஸ் ஸ்டாண்டில் வெயில் பொசுக்கிக் கொண்டிருந்தது. பழைய திராட்சை பச்சை ஆரஞ்சு விற்றுக் கொண்டிருந்த கிழவன் மூக்கைச் சிந்திக் கொண்டிருந்தான். அவனில்லை, 'மினியம்மா' விடம் பேசினது. நடு மத்தியான வெயிலில் சூட்டையும் வேர்வையையும் தும்பு தூசியையும் பொருட்படுத்தாது மனிதக் கூட்டம் பஸ்களில் ஏறிக் கொண்டிருந்தது. குஞ்சு குளுவான்களுடன். பெட்டி படுக்கைகளுடன், மூட்டை முடிச்சுகளுடன். சின்னூர் பஸ் ஒண்ணேகால் மணிக்குத்தான். நானே பஸ் கிளம்ப ஒருமணி நேரத்துக்கு முன்னதாகவே வந்துவிட்டிருந்தேன். வந்த வேலை ஆகிவிட்டது. வெயிலில் எங்கே ஊர் சுத்துகிறது என்று நான் ஓட்டலில் சாப்பாட்டையும் முடித்துக் கொண்டு வந்துவிட்டேன். பொழுதைப் போக்கவென்று பஸ்ஸுக்குள் உட்கார்ந்து பத்திரிகை படித்துக் கொண்டிருக்கும்போது காதில் கணீரென்று விழுந்தது.

''ஏண்டி மினியம்மா அழுவறே?''

நான் சுற்று முற்றும் பார்த்தேன். பீடியைக் காதில் சொருகிக் கொண்டு கையில் பென்சில் டிக்கட் புத்தகத்துடன் முகத்தில் அரை மீசையுடன், 'பூனமல்லேய், காஞ்சவரேம்' என்று கூவிக் கொண்டிருந்த கண்டக்டர்; பக்கத்தில் ரிப்பன் கிலு கிலுப்பை விற்று அலுத்து ஓய்ந்துபோய் சும்மா நின்று கொண்டிருந்த ஒரு கால் சூம்பிப் போயிருந்த ஒரு ஆள்; அருகில் பஸ் ஸ்டாண்டு தூசியில் அத்வைதமாக ஐக்கியமாகி விளையாட்டுச் சண்டை போட்டுப் புரண்டு கொண்டிருந்த பையன்கள்; ஜமக்காளப் பையைத் தூக்கியபடி ஓடிவந்து கொண்டிருக்கும் பிரயாணிகள்; புகையிலையைக் குதப்பித் துப்பும் கிழவிகள்; இடுப்புக் குழந்தைக்கு முறுக்கைக் கொடுத்து கைக்குழந்தையை இழுத்து வந்து கொண்டிருந்த குமரிகள்; அழுக்குச் சட்டையும் 'வெள்ளை' வேட்டியும் அணிந்து சிகரெட் ஊதினபடியிருக்கும் வாலிபர்கள்; பேசிக் கொண்டும் சிரித்துக் கொண்டும் பெருமூச்சு விட்டபடி வேர்வையைத் துடைத்துக் கொண்டும் காதைக் குடைந்து கொண்டும் சில்லரையை எண்ணிக் கொண்டும் இருந்தார்கள். மற்றவர்கள் 'கண்ட்ரக்டரய்யா' விடமாவது கூலியிடமாவது வாதிட்டுக் கொண்டிருந்தார்கள். பஸ்கள் பேரிரைச்சலுடன் வந்து கொண்டும் போய்க் கொண்டும் இருந்தன. இந்தச் சந்தடிக்கிடையில்தான் என் காதில் விழுந்தது அக்கேள்வி.

''ஏண்டி மினியம்மா அழுவறே?''

முன்னால் புங்க மர நிழலில் வரிசையாக 'இந்நாட்டு மன்னர்களின்' மாளிகைகள், ஓலைத்தட்டி, தகரடப்பாக்கள், கோணிச் சாக்குகள் இத்தியாதி மூலச் சரக்குகளைக்கொண்டு நிர்மாணம் செய்யப் பட்டிருந்தவை. எதிரே இருந்த கார்ப்பரேஷன் குழாய்க்கடியில் இரண்டு குழந்தைகள் பூதகணங்கள் மாதிரிச் சரிந்த வயிறுடன் ஆநந்தமாகப் பச்சைத் தண்ணீரில் அளைந்து கூச்சலிட்டுச் சிரித்துக் கொண்டு குளித்துக் கொண்டிருந்தன. வறுத்த காப்பிக் கொட்டை போன்று வெயிலில் பளபளத்த அவர்களைப் பார்த்து வியந்த என் கண்கள் அருகில் பேசிக் கொண்டிருந்த இருபெண்களின் மேல் ஓடியது. அவர்களில் ஒருத்திதான் அழுது கொண்டிருந்தவள். மினுமினுக்கும் கருப்பு வண்ணம். எண்ணெய்யை விமரிசையாக விட்டு அழுத்தி வாரி எடுத்து முடிச்சுப் போட்டிருந்த கரு மயிர்க் கூந்தல். இருபத்து நாலு அல்லது இருபத்து அஞ்சு வயசிருக்கலாம். வெள்ளை ரவிக்கையும் சிவப்பு நூல் புடவையும் வெறும் கழுத்தும் கையுமாக இருந்தாள். அவள் இளமையைக் கசக்கிப் பிழிந்து எத்தனையோ குழந்தைகளாகப் பிண்டம் பிடித்துவிட்டுக் காலதேவன் கண்ணை மூடிவிட்டிருக்க வேண்டும். கவர்ச்சியான முகத்துடனும் கலங்கிய கண்களுடனும் கூடிய அவள் மூக்கைச் சிந்திப் புடவைத் தலைப்பில் துடைத்துக் கொண்டே ''வூட்டைத் தொடைச்சு எடுத்துக்கினு பூட்டானே, நான் இப்போ என்னபண்ணுவேன்'' என்று சொல்லிக் கொண்டிருந்தாள்.

''எல்லாம் பூடிச்சா, எம்மாத்தம் வெச்சிருந்தே?''

இது மினியம்மாவைக் கேள்வி கேட்ட அவள் சகபாடி. வயசு முப்பது முப்பத்தஞ்சி

ருக்கும். சுருண்டு கிடந்த முன் மயிரை நாகரிகமாகக் கோதிவிட்டுக் கொண்டு கழுத்தைக் திருப்பி வெற்றிலைச் சாற்றைத் துப்பி விட்டுக் கேட்டுக் கொண்டிருந்தாள். மினியம்மாவுக்கும் இவளுக்கும் உருவ அமைப்பில் வயசு வித்தியாசத்தைத் தவிர ரொம்ப வித்தியாசமில்லை. எத்தனையாவது குழந்தையோ வயிற்றை முட்டி வெளியே தள்ளிக் கொண்டிருந்தது. கையில் ரெண்டு கண்ணாடி வளையல்கள். மினியம்மாவின் காலில் ஒரு வெள்ளிக் காப்பு இருந்தது. இவள் காலில் அதுவும் இல்லை. வெடிப்பும் வெந்த தூசியும்தான். கொஞ்சம் வீக்கமும் கூட.

குசேலன் வீட்டுக்குமா திருடன், அப்படியானல் அவன் எப்படிப்பட்டவனாக இருக்க வேண்டும், என்று நினைத்துக் கொண்டே மறுபடியும் பத்திரிகை படிக்க ஆரம்பித்தேன். மனசு ஓடவில்லை. வெயிலும் புழுக்கமும் பத்திரிகையில் வெளிவந்திருந்த மந்த மதிகளின் வழக்கமான பேச்சுக்களும் என் கண்ணை மறுபடியும் குழாய்க்கரைக்கு விரட்டின.

கபந்தன் மாதிரி வயிற்றில் வாயையும் வாய் நிறைய மனிதர்களுமாக ஒரு நீண்ட பஸ், குழாயையும் மரத்தையும் தூசிப்படலத்தில் மறைத்து மறைந்தது.

"...பச்சை நோட்டுங்களா, மெய்யாவா" என்று ஆச்சரியத்துடன் கர்ப்பிணி கேட்டுக் கொண்டிருந்தாள்.

"ஆமா, பின்னே பொய்யா சொல்லப் போறேன், இரும்புப் பொட்டியிலே அடியிலே வெச்சிருந்தேன், ரெண்டு அஞ்சு ரூவா நோட்டு, அதையும் துருவியில்ல எடுத்துக்கினு பூட்டான். எத்தினி கஸ்டப்பட்டு சேத்து வெச்சிருந்தேன், அது அவனுக்கு ஆவலியே பாவி, அவன் கையை பாம்பு புடுங்க, அவன் காலை ஒடச்சு வெய்யில்லே போட" என்ருள் மினியம்மா.

"ஒம் புருசன் வந்த ஒடனே அதுங்கிட்டே சொல்லு. ஏன், நீயே அது இருக்குற ரிக்ஸா ஸாண்டிலே பாக்கறதுதானே, ஆளைக் கண்டுபுடிச்சு பணத்தையும் கக்கவெச்சுடரூரு. அஞ்சுருவா நோட்டா, நான் நூறு ரூவாயாங் காட்டியும்னு பாத்தேன்."

"தே பாப்பாத்தி, இந்த சமயம் பாத்து எங்கிட்டே வந்து வெள்ளாடறயே, என்னமா இருக்குது ஒடம்பு?" என்ருள் மினியம்மாள். மினியம்மாளைக் கேள்வி கேட்டவள் பேர் பாப்பாத்தியாக இருக்கவேணும்.

"நான் என்ன வெள்ளாடறேன், என்னமோ பணம் பூடுச்சின்னு அழுவறேயேன்னு சொன்னேன். ஒனக்கேண்டி இம்மாத்தம் கோவம் வருது. நான் எடுத்துக்கினேன்னு பாத்தியா? எனக்கேண்டி ஒம் பணம்? என் ஆம்பிளை தெனம் கொண்டாரான். பெறத்தியான் பணத்துலே எனக்கொண்ணும் ஆசை கெடையாது தெரிஞ்சுக்க, அதுவும் ஒம்மாதிரி நல்லாத் தெரிஞ்சவங்க கிட்ட. என்னமோ கஸ்டப்படறியேன்னு சொன்னேன். பாத்தா என் மேலேயே தாவுறியே" என்று அடுக்கிக் கொண்டே போனுள் பாப்பாத்தி.

"தே, கோவிச்சுக்காதே. விஷயம் தெரியாமே வுடுவுடுன்னு பேசிக்கினே போறயே. எம் புருசன்தான் தம்பிடி வெக்காமே எல்லாத்தையும் தொடைச்சு எடுத்துக்கினு பூட்டாங்கறேன், நீ என்னடான்னு அதுங்கிட்டியே போயி சொல்லுன்னு சொல்றியே..."

"ஒம் புருசனு எடுத்துக்கினு பூட்டாரு. இருக்காது மினியம்மா, ஒனக்கு தெரியாமே சொல்லுறே. அவுரு நல்லவராச்சே, தெனம் ஒழுங்கா ராத்திரி வந்து 'இந்தா மினியம்மா, இன்னிக்கி வரும்படி'ன்னு சொல்லிச் சம்பாரிச்ச துட்டெல்லாம் குடுப்பாருன்னு நீயே, அவுரா இப்பிடி பண்ணுவாரு. அதென்ன இப்பிடி சல்லீசா சொலலிட்டே. என் ஆம்பிளை கூடச் சொல்லும் 'அவங்களைப்பாரு, எப்பிடி குருவிங்க மாதிரி சந்தோஷமா இருக்காங்க'ன்னு. நான் சொல்றதைக் கேளு, ஒம் புருசன் எடுத்திருக்காது, ஒங் கொழுந்தன் இருக்கானே அவனைச் சொல்லு, அவன் எடுக்கக் கூடிய ஆளு. அவனை நம்பக் கூடாது. அஞ்சு புள்ளை பெத்துட்டு ஆருவதை தூக்கிக்கினு இருக்கேன், என்னெயெப் பாத்துக் கண்ணடிக்கிருனே அவன். நீ வேணுமின்னு பாரு, சும்மா ஒம் புருசனை திட்டாதே."

"ஆ ஆமா, நீதான் மெச்சிக்கணும் என் புருசன் லச்சணத்தை. இந்தாடி மினியம்மா இன்னிக்கி வரும்படின்னு சொன்னதெல்லாம் போயி எத்தினியோ காலமாவுது. வாடி மினியம்மா சினிமாவுக்கு போவம், வாடி மினியம்மா பீச்சுக்கு போவம்னு கூப்ட்டுக்கினு போயி வந்தவன்தான். அதெல்லாம் போச்சு. இப்போ அந்தக் காமாச்சிகூட இல்லே ஓடிப் பூட்டான், கெம்மினுட்டி" என்று சொல்லிக் காறி உமிழ்ந்தாள் மினியம்மா.

"என்னது? ஓடிப்பூட்டானு? காமாச்சியோடயா? எந்தக் காமாச்சி? சிலுக்குப் பொடவை கட்டிக்கினு மினுக்கிக்கினு இருந்தாளே அந்தக் காமாச்சியா? இருக்காது மினியம்மா. ஒம் புருசன் எங்கே, அந்த ராச்சசி எங்கே?" சுவராஸ்யமான சமாசாரம் கேட்கப்போகிற ஆவலுடன் பாப்பாத்தியும் இடது பக்கம் திரும்பி எச்சிலைத் துபபினுள்.

"எல்லாம் அந்த டீக்கடை தேவடியா முண்டைதான், எம் புருசனே ஒரு நாளு சொல்லிச்சே — 'அந்தப் பொட்டிக்கடை காமாச்சியைப்பாரு, அவ வியாபாரம பண்ண

ரூன்னு நல்லா விக்குது. கடு தண்ணியே வாங்கி 'டீ'ன்னு குடிச்சுட்டுப் போருங்க, காசை வேறே குடுத்துட்டுப் போருங்க. நல்லா சம்பாரிக்கரு. மினியம்மா நீயும் ஒரு சின்னக்கடை இந்தக் கோடியிலே வெச்சுப் பாரேன். நீயும் அப்போ சிலுக்குப் பொடவை வாங்கிக் கட்டுவியாம். நான் என்னதான் நாள் பூரா மெரிச்சாலும் முழுசா மூணு ரூவா கைக்கிவர்றதில்லே' அப்பிடீன்னு சொன்னுன். 'சீ பேமானி, இன்னெரு வாட்டி எங்கிட்டே அவ பேச்சு எடுத்தே, அவ்வளதான். யாவாரம் பண்ருளாம் யாவாரம். அந்த யாவாரமும் எனக்கு வாணும், அப்பிடிவர சிலுக்குப் பொடவையும் எனக்கு வாணும். யாரு சிலுக்குப் பொடவை இல்லேன்னு இப்போ அழுதாங்க, மானமா கஞ்சி குடிச்சிட்டுக் கெடந்தா போறும். என்னுத்தை யாவாரம் பண்றது. போறவன் வரவன் எல்லாம் கண்ணுலே ஒடம்பை தடவிக்கினே போருன், சமயமின்னு கையையும் வெச்சுடுவான் காசு குடுக்கற திமிரிலே. வெக்கமில்லாமே என் கிட்டவே சொல்லறியே. மானமில்லே பேமானி. சிலுக்குப் பொடவை கட்டின பொண்சாதி வேணும் மினு போறதுதானே அவ கிட்டியே, அப்பிடி இப்பிடின்னு திட்டிப் பிட்டேன். என்னு நெனேச்சுக்கினுனே, ஓடி ஓடிப் பழக்கம், இப்ப அப்பிடியே ஓடிட்டான்'' என்று மூச்சமுட்டச் சொன்னுள் மினியம்மாள்.

"எப்பந்து இதெல்லாம்?" என்று கேட்டாள் பாப்பாத்தி.

"ஆச்சு, பத்து இருவது நாளாச்சு. நான் திட்டினதுக்கப்பாலே அது ஒரு வாரம் ஏங்கிட்ட சரியாவே பேசலே. வூட்டுக்கும் ஒழுங்காவே வர்றதில்லே. அஞ்சாறு நாளுக்கு முன்னுலே 'மினியம்மா. ரிக்ஸாவுக்கு வரி கட்டணும், கையிலே காசேயில்லே, ஒன் காப்பைக் கொஞ்சம் குடு, வெச்சு ரெண்டோ மூணே கெடச்சதை வாங்கியாறேன், ஒரு மாசத்திலே மூட்டுக் குடுத்திடறேன்'னு என் காப்பை கழட்டிக்கினு போனவன்தான். அப்பாலே ஆளேயே காணலே. அவ கடையும் மூடிப் போச்சு, அவளேயும் காணலே. ரெண்டு பேரும் சேந்தாப்பலே பேசி வெச்சுக்கினு போயிட்டிருக்காங்க. இன்னிக்கி செலவுக்கு வேணுமின்னு பொட்டியிலே அடியிலே பத்திரமா அவசரத்துக்கு ரெண்டு அஞ்சு ரூவா நோட்டு வெச்சிருந்தேன், அதை எடுக்கலாமின்னு போனு, அதையும சுத்திக்கினு போயிட்டிருக்கானே, பாவி, அவனேப் பாடையிலே வெக்க...'' மினியம்மாள் மேலும் சொல்லிக் கொண்டே போனது சாதாரணமாக வழக்கிலுள்ள ஆனல் அச்சுயந்திரம் அறியாத சில வசனங்கள்.

பாப்பாத்தி சொன்னுள்: இவ்வள தூரத்துக்கு ஆயிடிச்சா? எனக்குத் தெரியவே தெரியாதே. இருந்தாலும் அப்பவே நான் நெனேச்சேன். அந்த செறுக்கி கடை வெச்சப்பவே நான் நெனேச்சேன். சிலுக்குப்பொடவை மாத்திரம்தானு கட்டரு அவ. அவ தளுக்கென்ன மினுக்கென்ன, சினிமா பாட்டு படிக்கிற தென்ன. அவ கடை வெச்சண்ணிக்கே என் ஆம்பிளே கிட்டே கூடச் சொல்லிட்டேன் 'நீ அங்கே போயி பல்லேக் கில்லே காமிக்கப் போறே, பத்திரம்'னு. பாவி, அப்பிடியா பண்ணிட்டான் ஒம் புருசன், காப்பைக் கயட்டிக்கினது இல்லாமே கல்லாப் பெட்டியைக் கூடவா கிளீன் பண்ணீட்டா போயிட்டான். நான் கூட அப்பவே நெனேச்சேன், என் புருசன் கிட்டே கூடச் சொன்னேன்: 'மினியம்மா புருசனேப்பாரு, என்ன கரெய்ட்டாக்கிருன், எனக் கென்னவோ சந்தேகந்தான். ஆம்பிளேங்கள்லாம் எவ்வள நாள் இப்பிடி இருப்பாங்கன்னு, அவுளுக்கும் ரெண்டு கொழந்தை வுழட்டும் அப்பறம் பாக்கலாம் ஐயா விசயத்தை'ன்னு மொதல்லியே சொன்னேன். அப்பிடியே இல்லே பண்ணீட்டான். இந்த ஒழுங்கு பேசற ஆம்பிளேங்களே இப்பிடித்தான் மினியம்மா, திருட்டுச் சோமாறிங்க. என் ஆம்பிளேயைப் பாரு, சண்டைதான் போடருரு, சில நாள் அடிக்கக்கூட அடிச்சிடருரு. ஆனு, கடைசியிலே நான் சொன்னதுக்கு மீறி நடக்கிறது கெடயாது. உம்ம்ம், நான் அப்பவே நெனேச்சேன். நீ கவலேப்படாதே மினியம்மா, தானே வந்துடுவான்.''

''வரான் வரான். தானே அவ வெரட்டினு வரான். வராமே எங்கே போயிடுவான். வரட்டும். வந்தா நான் உள்ளே உடுவேனு, என் ரூவாயைக் கக்கிட்டுப்போடா கயிதேன்ன மாட்டேன்? போடா போக்கத்தவனேன்னு போடமாட்டேனு. போயி அவ காலு கொலுசைக் கழட்டிக்கினு வா கம்மினுட்டின்னு வெரட்ட மாட்டேனு. அவுரு வரலேன்னு இங்கே யாரும் அழுது மூச்சுமுட்டிச்சாவலே.'' என்று கூறினுள் மினியம்மா. அவள் கண்களிலிருந்து பொறி பறந்தது. பற்களின் மேல் வெயில் பட்டுச் சிதறியது. ஆக்ரோஷத்துடன் படபடவென்று கை விரல்களே நெறித்தாள்.

''தே மினியம்மா, ரவை பொகலேக்காம்பு இருந்தாக் குடேன். ஆமா, ஒம் புருசன் போயிட்டானே, நீ தனியாவேயா இருக்கே இங்கே?'' என்று கூறிக் கொண்டு உட்காரப் போனுள் பாப்பாத்தி.

''இந்தப் பசங்களேக் கொஞ்சம் பாக்கயேன். பஸ்ஸிலே கிஸ்ஸிலே மாட்டிக்கினு நிக்கப் போவுதுங்க. நான் உள்ளே தேடிக் கொண்டாரேன். அவன் போனு எனக் கென்ன, அவுரு தம்பிதான் கீருரே.'' முனியம்மாள் குடிசையினுள் நுழைந்து கொண்டிருந்தவள் திரும்பிப் பதில் சொன்னுள். அவள் முகததில் முன்னிருந்த கோபம் போய்ச் சாந்தம் குடிகொண்டிருந்தது. ''டேய், ரொம்ப நனேயாதீங்கடா'' என்று குழந்தைகளுக்குக் குரல் கொடுத்துவிட்டு இருட்டாயிருந்த குடிசைக்குள் நுழைந்தாள்.

ஹார்ன் அடித்துக்கொண்டே என் பஸ் நகர ஆரம்பித்தது. ●

# அசைவுகள்

நா. ஜெயராமன்

இவ்வளவிற்கும் அவன் அந்த வீட்டு ஆண்களோடு பழகியதில்லை. எதிரெதிராகச் சந்தித்துக்கொள்ள நேர்ந்த சந்தர்ப்பங்களில் முகத்தை ஏறிட்டுப் பார்த்துச் சிரித்ததாக பாவனை செய்ததுகூடக் கிடையாது. கதவைத் திறந்து படிக்கட்டில் இறங்கக் காலை வைக்கும் சமயத்தில் அவர்கள் யாராவது படியேறி வந்தாலோ அல்லது அவர்கள் வீட்டுக் கதவைத் திறந்துகொண்டு வந்தாலோ ஒதுங்கிக் கொண்டு திரும்ப உள்ளே வந்து விடுவான். இவன் இதை சகுனத்தடை கருதி செய்கிறானே என்று அவர்கள் எண்ணிவிடக் கூடாதே என்ற பயமும் உண்டு. பாதி வழியில் எதிர் கொள்ள நேர்ந்தால் உடம்பை ஒடுக்கிக் கொண்டு தலையைக் குனிந்து கடந்து போவான். ஆனால் இந்த ஒரு வாரத்தில் சூழ்ந்துவிட்ட வெறுமையை அதிகமாக உணர்ந்தது அவன்போலவே பட்டது. முதல் படியை அடுத்த அகலப்படிக்கு எதிரில் அந்தக் கதவு இருக்கிறது. அது இப்பொழுது பரக்கவே திறந்திருக்கிறது. இறங்கிச் செல்லும் போதும், ஏறி வரும்போதும் அந்த இடத்தில் நிதானமாக நின்று வருகிறான். அவர்கள் இருந்த நாட்களில் அவன் கால் வைத்து வந்த படிகளில் அதுவும் ஒன்று. அவனை நிறுத்தி வைத்து, ஒரு புதிய அனுபவ வசம் அவனை ஆக்கிய முக்கியத்வம் அதற்கு இருந்தது இல்லை. நடந்து வந்த வேகம் தடைப்பட்டு ஸ்தம்பித்து நிற்கையில், வெறிச்சோடிப்போன உணர்வின் ஊடே புழுதி நெடி மூக்கில் குறுகுறுக்கத் தும்மலுக்குத் தயாராகிறான். சுருட்டிப்போட்ட பழங் காகிதப் பந்து கண்ணில் படுகிறது. அது, காற்றில் இடம் மாறுவதை அவன் கவனித்து வைத்துக் கொள்கிறான். கந்தல் துணியொன்று ஜன்னலிலிருந்து தொங்கிக் காற்றில் ஊசலாடுகிறது. வராண்டாவைப் பிரிக்கும் தடுப்பில் மரச் சட்டத்தில் பாய்ந்து ஏறும் அணில் திரும்பிச் சரசரக்கிறது.

யார் யாரோ வந்து பார்த்துவிட்டுப் போகிறார்கள். பாதி படிக்கட்டில் முழங்காலில் கையை ஊன்றிக்கொண்டு நின்றுவிடும் முதியவளுக்காக மேல் படியில் காத்திருக்கும் கண்ணாடி போட்ட இளைஞன், சுருட்டு வாடை பரவவந்து தொண்டையைச் செருமிக் கொண்டு இறங்கும் மீசைக்காரர் —எல்லோரையும் ஒரு ஜாடையில் அவன் பார்க்கிறான். அகலப்படி அவனை நிறுத்தி வைத்துக் கொள்ளாத நிலைமை இன்னும் ஏற்படவில்லை.

அவர்கள் இங்கு ஒருவருட காலம் இருந்திருக்கலாம். ஏறக்குறைய அவ்வளவுதான் இருக்கும். அவர்கள் இங்கு வந்த நாளை அவன் டயரியில் கூடக் கண்டுபிடிக்கலாம். அன்று அவனுக்கு நடந்த ஏதோ முக்கியமானதைக் குறித்தபோது இந்தத் தகவல் பேனா தயக்கத்துடன் குத்திட்டு நிற்க, ஒரு நிமிட தாமதத்தின் பின் கிறுக்கலாக ஒட்டிக்கொண்டது. அவர்களுக்கு எதற்கானும் தேவைப்பட்டால் சொல்லலாம் என்று காரணம் கற்பித்துக் கொண்டான். சில நாட்களில், டயரியில் எழுத ஏதும் விஷயம் இல்லாதது போலத் தடுமாறிக்கொண்டிருக்கையில் பழைய பக்கங்களைப் புரட்டிப் பார்வையை அங்குமிங்குமாக நிலைக்க விடுகையில் இந்தத் தகவலின் அவசியமின்மை உறுத்த அதனை அடிக்க நினைத்தது உண்டு. அந்தமாதிரியான நிமிடங்களின் உந்துதலை மீறியும் அது அடிபடாமல் இருக்கிறது.

அவசியம் நேர்ந்திருப்பினும் இதை யார் அவனிடம் கேட்டிருக்கக்கூடும் என்பதைப் பற்றி அவனுக்குச் சந்தேகமாகவே இருந்தது. அவன் ஒருவன் இருப்பதை யாரேனும் அவர்கள் வீட்டில் உணர்ந்திருப்பார்களா என்பதையும் அவன் வேடிக்கையாக நினைத்துப் பார்த்தான். இவன் படியேறி வருகையில், அவர்களுடன் பேசிக்கொண்டிருக்கும் அம்மா, முழங்கை ஒருக்களித்த கதவில் இடிக்க எழுந்திருக்கும் சமயங்களில் எல்லாம் இவனுடைய இருப்பு அவர்களுக்குப் புலனாகியிருக்கக்கூடும். அவன் உள் நுழைந்த பின்னால், கதவு மெதுவாகத் தாழிடப்படும் நளினம் அவனுக்கு ஞாபகம் இருக்கிறது.

அவர்கள் வீட்டில் அவன் யாரை அறிந்திருக்கிறான்? அந்த வீட்டின் காரியங்களுக்கெல்லாம் பொறுப்பானவராய்த் தோற்றமளிக்கும் மூத்த ஆண் பிள்ளையை நினைவிலிருத்திப் பார்க்கிறான். நடுநிசி, விடியற்காலம், நடுப்பகல் என்று மாறிய வேளைகளில் அவன் காதுக்குப் பழக்கமான பூட்ஸ் ஒலியை அவன் துல்லியமாக உணர்கிறான். இருட்டுகிற சமயத்தில் பரவுகின்ற சிகரெட் புகையின் வாடை

சுட்டுகின்ற ஓர் ஓய்ந்த மனதின் சுகலயிப்பு அவனுக்குப் பிடிபடுகிறது. சாலையில் எப்பொழுதாவது சாயலாகக் கவனிக்க நேரும் சிகரெட் புகைத்துக்கொண்டு செல்லும் உருவம் தொடர்பற்றதே போன்று தோன்றும் கனவில் நிழலாய்த் தட்டியிருக்கிறது. வேலைக்குப் போவதும், சிகரெட் பிடிப்பதும்தான் அவருக்குத் தெரிந்த காரியங்களா? அவர் பேசக்கூட செய்திருக்கிறார். தன் வயதை மறந்த உற்சாகத்துடன் பேசியிருக்கிறார். உறக்கம் இழப்புகளில் ஒன்ருகிப்போன ஓர் இரவில் அந்த பேச்சுச்சத்தம் துன்புறுத்தியது. தன்னுடைய உறக்கமின்மைக்கு அந்த உரையாடல் தான் காரணமென எரிச்சல் கொள்ளுமளவுக்கு அந்தச் சத்தத்துடன் ஒன்றியும் ஒன்ருமலும் இருந்தான். கதாகாலக்ஷேபம் முடிந்து திரும்பியவர்களைத் தொடர்ந்து அந்த பேச்சு ஆரம்பமாகியிருக்க வேண்டுமென அவன் ஊகித்தான். கல்லூரியில் படிக்கும் உறவுக்காரப் பெண் ஒருத்தி அவருடன் தர்க்கம் செய்து கொண்டிருந்தாள். கதை கேட்கும் பொழுது வீண் என்ருள். எல்லாமே கட்டுக்கதை, ஒன்றையும் நம்ப முடியாது என்று அவள் சொன்னபோது அவர் சிரித்துக்கொண்டு இப்பொழுது நடக்கும் விஷயங்கள் நூறு வருடங்களுக்குப் பிறகுக் கட்டுக் கதையாகத் தோற்றமளிக்கும் என்ருர். அவள் ஏதோ விஷமமாகச் சொன்ன போது, நம்பிக்கையில்லாவிட்டாலும் நம்பிக்கை வைத்திருப்பவர்களைக் கிண்டல் செய்வது அறியாமை என்ருர். ஏதோ ஓர் இழையில் அந்த பேச்சினின்றும் நழுவித் திரும்ப அதனுடன கலக்க நேர்ந்தபோது அவர்கள் அந்த பேச்சில் வட்டமடித்துக் கொண்டிருந்தது அபத்தமாகவும், எரிச்சலாகவும் அவனைப் பாதித்தது. பலத்து ஒலித்த அவர் குரலை மீறி அவள் குரல் கேட்கிறதா என்று உற்றுக் கேட்டான்.

அந்தக் குரலுக்குரியவளைப் பார்த்ததாய் நினைவில்லை. பேச்சுக் கொடுத்தவாறே படிகளில் ஏறியோ அல்லது இறங்கியோ செல்லும் போது அது அவளாகத்தான் இருக்க வேண்டுமெனப் பலதடவைகள் அனுமானம் செய்திருக்கிருன். இதுபோலத்தான், அவர்கள் வீட்டிற்கு ஸ்கூட்டரில் வரும் இளைஞனையும், அவன் மனைவியையும் அவன் பார்த்தது இல்லை. புத்தகத்தில் பதிந்த கவனத்தின் ஊடே, ஸ்கூட்டர் ஒலி அடங்கி நிறுத்தி வைக்கப்பட்டு காலடியோசை படியில் ஒலிப்பதை அவன் கேட்டிருக்கிருன். புத்தகத்திலிருந்த கவனம் பிசகி ஜன்னல் புறம் பார்வை திரும்பிய நாள் இல்லை. சிறிது நேரத்தில் குழந்தைகளோடு குழந்தையாய் மாறும் இளைஞனின் ஆரவாரம், ஊகம் சரியாய் இருப்பதைக் காட்டும். அவர்கள் வந்து உள் நுழைந்த பின்னுல் அவன் வெளிக் கிளம்பியிருக்கிருன். படியில் இறங்கும்போது மல்லிகைப் பூவின் வாசனையை அவன் உணர்ந்திருக்கிருன். இளைஞனின் மனைவி கூந்தலில் வைத்துக்கொண்டு வந்திருக்கவேண்டும். அவள் முகம் பார்த்து மறந்த ஒன்றின் தோற்றம் கொள்ள, இதுபோன்ற மணம், தொலைவிலிருந்து வரும் நாதத் தொனி போன்றவற்ருல்தான் அடிக்கடி புதுப்பிக்கப் படுகிறேம் என்கிற பிரக்ஞை வர மேலே செல்வான். அந்தப் பொழுதில் அர்த்தம் புதிதாய்ப் பெற்றவனுய் முகத்தில் பிரகாசம் தெரியும்.

அந்த இளைஞன் ஒரு நாள் மாலை தப்பிய வேளையில் ஸ்கூட்டரில் வந்தான். அன்று அவன் மனைவி வந்திருக்க முடியாதென பின்னுல் தெரிந்தது. அன்றும் அவனுக்கு உறக்கமில்லை. இடியாப்பக்காரனின் கூவலிலிருந்து பொழுது விடியலின் சமீபம் என்று கொண்டான். மாடிப்படியைக் கடந்து வந்த காலடியோசையில் அவசரம் தெரிந்தது. தாழ்ப்பாள் மூன்று, நான்கு தடவைகளுக்கு மேலாக ஒலியெழுப்பிய பின்னரே கதவு திறந்தது. முகத்தை அடையாளம் கண்டு என்ன என்று கேட்ட பெண் குரலிலும் பதைப்பு தெரிந்தது.

“மூணு மணிக்கு வலி எடுத்தது. டாக்ஸியிலே வச்சு கூட்டிண்டு போனேன். இன்னும் கொஞ்ச நேரத்தில் டெலிவரி ஆயிடுமனு சொனனு. உன்கிட்டே சொல்லிட்டு கூட்டிண்டு போலாம்னு வந்தேன்.”

‘‘டாக்டர் பார்த்துட்டாளோன்னே... உள்ளே வாயேன்’’ — படிக்கட்டிலேயே தொடர்ந்து பேச்சு கேட்டது.

“இருக்கட்டும், நீ வர்றையா?”

“எத்தனை மணிக்கு ஆகும்னு சொன்னு?’’

‘ நேரம் சொல்லலை. சீக்கிரம் ஆயிடும்னு சொன்னு?’’

‘‘உள்ளே வா. காப்பி சாப்பிட்டுட்டு ரெண்டுபேரும் போலாம்’’—கதவு தாமதமாய் மூடப்பட்டதிலிருந்தும், ‘இனிமே ஒண்ணும் பயமில்லை. அவா பார்த்துப்பா’, என்று தேய்ந்து ஒலித்த பெண் குரலிலிருந்தும் இளைஞனின் அவசரம் தீவிரப்பட்டுக் கொண்டிருந்தது தெரிந்தது. உரையாடல் அவன் மனதுள் தாறுமாருகத் திரும்ப நிகழ்ந்தது. இந்த எதிர்பார்த்தலையும், காத்திருத்தலையும் எதிர்காலம் தனக்கும் வைத்திருக்கும் என்று உணர்ந்த கணத்தில் அவனை வாழ்வின் நியதி

அச்சுறுத்தியது. உடம்பு உணர்ந்த சில்லிப் பிற்கு அந்த பொழுதும் துணை நின்றது. உறக்கம் பூரணமாக இல்லையென ஆகக் காரணம் கிடைத்தது.

பிரசவத்திற்கும் அந்த வீட்டுக்காரரின் மனைவிக்கும் சரியான ராசி இருக்கவேண்டும். பல இரவுகளில் தொடர்ந்து கேட்கும் குழந்தையின் அழுகுரல் எங்கிருந்து வருகிற தென்று அவன் கேட்டுத் தெரிந்து கொண் டிருக்கிறான். உறக்கத்தில் யாருமே குழந்தை யின் அழுகுரலைக் கேட்கத் தவறியிருப் பார்களோவென அவன் பலநாள் சந்தேகித்து அம்மாவுக்குக் குரல் கொடுத்திருக்கிறான். அழு குரலுக்கிடையே டபரா, டம்ளர் நகர்த் தப்படும் ஒலியை அம்மா சுட்டிக் காட்டி அவன் சந்தேகத்தைப் போக்கியிருக்கிறாள். பிரசவத்திற்கு முன்னாலும் பின்னாலும் அவர் கள் வீட்டில் தங்கியிருந்த அவள், அவர் களுக்கு என்ன உறவென்று தெரியவில்லை. அவன், அவசரமாய்ச் சாப்பிட்டுக் கொண் டிருந்த ஒரு நாளில் ஏதோ வாங்கிப்போக வந்த அவளை யாரென்று கேட்க, அம்மா உறவு சொல்லியிருக்கிறாள். அது நினைவில் இல்லை. அவளுக்கு அவர்கள் வீட்டிலிருந்த வேறு யாரோ ஒருவரின் ஜாடை ஒப்பிட்டுக் கண்டறிந்த பிரமையாய்த் தோன்றியது. அவள் ஊருக்குப் போகையில் சொல்லிக் கொண்டு போகவந்தாள். கதவைத் திறந்த அம்மா அங்கேயே பேசிக்கொண்டிருந்தாள். அவள் மிகவும் கஷ்டப்பட்டு அம்மாவுக்கு நமஸ்காரம் செய்தாள். பின்னால் அம்மாவை இதுபற்றிக் கேட்டபோது,

'அவாளுக்கும் அவசரம் எனக்கும் சட்னு ஒண்ணும் தோணலை' என்றாள். இது நிகழ்ந்து கொண்டிருந்த சமயம், அவள் ஊருக்குப் போகிற விஷயம் தனக்குத் தெரிய வந்த சந்தர்ப்பத்தையும் நினைத்துப் பார்த் தான். அவர்கள் வீட்டிலிருந்து திரும்பி யிருந்த பாத்திரத்திலிருந்து அம்மா எதையோ எடுத்து வைத்துக்கொண்டிருந் தாள். அவன் கையில் அம்மா திணித்ததை சாப்பிட்டபோது தான் ருசித்துச் சாப்பிட்ட வேளைகளில் இதுவும் ஒன்று என்று உணர்ந் தான். பாத்திரத்தின் அடியிலிருந்த தீய்ந்த வெல்லப்பாகின் பிசுக்கு கண்ணில் பட அம்மா விடம் விளையாட்டாக,

'அலிபாபாவின் அண்ணன் பெண்டாட்டி மாதிரி ஏதாவது வச்சு அனுப்பினாயா?' என்று கேட்டான். இதைத் தொடர்ந்து போகிற போக்கில், 'என்ன விசேஷம்?' என்று அவன் கேட்ட கேள்விக்குப் பதிலாய் அவள் ஊருக் குப் போகிற விஷயம் தெரிந்தது.

இதைத்தான் கேட்டுத் தெரிந்து கொண் டோமா என்பதே சந்தேகமாய் இருக்க, அவ ளுக்கு இது இரண்டாவது பிரசவம் என அறிந்து கொண்ட தகவல் ஆச்சரியம் கொடுத் தது. அவளுடைய மூத்த குழந்தையாகத்தான் இருக்கவேண்டும். ஒரு மத்தியானப் பொழு தில் எதையோ யோசித்துக்கொண்டு கண் சொருகிய சமயத்தில் திடுக்கிட்டு விழிக்க நேர்ந்தது. ஏதோ உருண்டு, புரண்ட சத்தம் தொடர்ந்து குழந்தையின் வீறிட்ட அலறலும் பெரியவர்களின் கூக்குரலும் கேட்டன. சுற்றி யிருந்தவர்களின் பேச்சொலியிலிருந்து குழந்தை ஸ்டூல் மேலேறி குப்புறவிழுந்து அடிப்பட்டுக் கொண்டதை அறிந்தான். அன்று மாலை வீட்டை விட்டுச்சிறிது தூரம் சென்றதும் தன் மனதில் மின்னலெனத் தோன்றிய உதடு வீங்கிய குழந்தை உருவம் தான் வருகையில் படிக்கட்டு அருகே நின்ற அவர்கள் வீட்டுக் குழந்தையென அடை யாளம் கண்டு கொண்டான்.

அன்று, படியேறியபோது வழியில் குறுக் கிட்ட மரபீரோ, ஊருக்குப் போகையில் விடை பெற்றுச் சென்றவள், 'அடுத்த தடவை வர்றப்போ அந்த வீட்டுக்குப் போகணும்,' என்று சொன்ன வாசகத்தை நினைவுபடுத்தி அவர்கள் வீடு மாற்றிப் போகிற நாள் இவ் வளவு விரைவிலேயே வந்து விட்டதா என வியப்புறச் செய்தது. அதற்கடுத்த இரண்டு நாட்களுக்கு படியேறிப் போகவேண்டும் என்று நினைத்தவுடனேயே வழியில் பீரோ குறுக்கிடுமோ என்று மருண்டான் தொடர்ந்த நாட்களில் இந்த மருட்சி நீங்கி அகலப்படி நின்றுபோக வைத்துக் கொண்டிருந்தது.

அன்றும் படியேறியபோது தன்னையறியா மலே ஏதோ ஒரு பழக்கத்திற்கு அடிமையாகி விட்டிருப்பதைப் பற்றி யோசித்துக்கொண்டு வந்தான். படிகளில் அங்குமிங்கும் திட்டாய்ப் படிந்திருந்த தண்ணீர் அருவருப்பை கொடுத் தது. அகலப் படியில் தண்ணீர் அதிகமாகவே இருந்தது. ஒருவாரப் பழக்கம் கந்தல் துணி யையும், காகிதப் பந்தின் இடமாற்றத்தையும் அறிய ஆவலுற்றது. அவைகளைக் காணோம். வராண்டா கழுவி விடப்பட்டுக் காய்ந்து கொண்டிருந்தது. கதவும் பரக்கத் திறந்து கிடக்கவில்லை. தாழ் போடப்பட்டிருந்தது. உள் நுழைந்தான். உடையை மாற்றிக் கொண்டிருந்தபோது யாரோ சொன்னார்கள்.

"அந்த வீட்டுக்கு அட்வான்ஸ் கொடுத் தாச்சாம்."

"யாராவது வந்துட்டுப் போகட்டும். நமக்கென்ன?" என்றான். ●

# ஞானக்கூத்தனின் எட்டுக் கவிதைகள்: சில குறிப்புகள்

**நகுலன்**

கசடதபற ஆகஸ்ட் இதழில் "பதி"யின் "கரிக்கோடுகள்" படித்ததின் விளைவு இக்கட்டுரை. நான் "தாமரை" ஜூலை இதழில் ம. நா. ரா. எழுதிய கட்டுரையைப் படிக்கவில்லை. எனக்கு ஞானக்கூத்தன் கவிதை பிடிக்கிறது என்பதன் அடிப்படையில் தான் இக்கட்டுரை எழுதுகிறேன்.

எட்டாவது கவிதை பற்றி ஒரு வார்த்தை. இந்தக் கவிதையின் அர்த்தமோ அநர்த்தமோ ஒரு புறம் இருக்கட்டும்; பால் விவகாரம் இங்கு இருக்கிறதுதான்; அர்த்தத்தில் இல்லை—அமைப்பில், பாவத்தில், தொனியில். இதனால் தான் இந்த 8—ஆவது கவிதை உத்திவகையில்—தாக்கல் அல்லது அதிர்ச்சியை விளைவிக்கிறது—shock tactics.

*கவிதை 1:* (i) முதல் பகுதியில் "சுற்றத்தார் சாயல் காட்டி" என்பதில் செல்லப்பா பாஷையில் படிமம் குறியீடாகப் பயன் படுகிறது.

*பகுதி 2:* (ii) த்வனி இங்கு திறம்பட நுணுக்கமாக இயங்குகிறது. "காந்தர்வர்...போனர்" — இது எனக்குப் பழக்கமுள்ள பிரதேசமில்லை. ஆதலால் நான் இதை விட்டு நகர்கிறேன்.

(iii) சிலேடை. "பெயர்"மீது த்வனி இங்கும் இயங்குகிறது.

*கவிதை 2:* "பதி"யின் விளக்கம் பரம சுகம். "விழுந்த நோவும் இன்றி" என்ற தொடரில் நவீனக் கவிதையின் சாயல்—இரத்தக் களங்கம் இல்லாமல் என்பதையும் கவனிக்கவேண்டும் — கர்த்தரின் பரிசுத்த ஜனனம் போல்.

*கவிதை 3:* பயம்தான் வைர ஊசி—குறியீடு+படிமம். நெஞ்சம் "உருவகம்."

கால் முளைத்த கிணறுகள். இரயிலில் சஞ்சரித்தவர்களுக்கு எளிதில் புரியும். உவமை(?)யில் ஒற்றுமை ஒரு அளவில்தான் என்பது பழைய வியாக்கியானம். படிமம் என்பது ஒரு உணர்ச்சி—சிந்தனைச் சூழலில் உருவாகிறது என்பது நவீன வியாக்கியானம்

ஏணி. முதல் பகுதியில் படிமம் படிமமாகவும் இரண்டாவதில் அது ஏனனச் சாயல் காட்டிக் குறியீடாகவும் இயங்குகிறது. பழைய பாஷையில் "சமத்காரம்."

*கவிதை 4:* வார்த்தைகளுக்கு அப்பாற்பட்டதை வார்த்தைகள் மூலம் காட்டுவதற்கு ஒரு முயற்சி. "விழிக்கிறான்" என்பதில்தான் விஷயம் இருக்கிறது.

> "உறங்குவது போலுஞ் சாக்காடுறங்கி
> விழிப்பது போலும் பிறப்பு"

—என்பது குறள்.

*கவிதை 5* முதல் 3 கவிதைகள் — யதார்த்த உலகம். பிற்பகுதி 3-சங்கேதம். கடைசிப் பகுதி எனக்குப் பிடித்திருக்கிறது— "விரசம்" என்பதால்தான் என்று வைத்துக் கொள்ளுங்கள்! ஒன்றும் குடிமுழுகிப் போய் விடவில்லை!

*கவிதை 6:* விளக்கம் தேவையில்லை. "குசுப்போல்..." இந்த மாதிரி வார்த்தைகளை உபயோகப்படுத்தக் கூடாதா? இங்கு கூட இந்தமாதிரி வார்த்தைகள் அல்ல, அவைகளைப் பயன்படுத்துவதில்தான் ஒரு புதுமை இருப்பதாகத் தோன்றுகிறது. அனுபவத்தின் மூச்சு முட்டலில், வாதினையில், சம்பிரதாயத்தின் கட்டுப்பாடு தகர்ந்து போகிறது என்பது ஒன்று; உடலின் உடலாக இருக்கும் தன்மையை ஒதுக்காமல் ஏற்றுக் கொள்வது என்பது ஒன்று. (முத்துசாமியின் "நீர்மையில்", "எனக்கு இயற்கையாகவே கொஞ்சம் பெரிதாகத் தொங்கிற்று" என்ற வாக்கியத்தின் கலாபூர்வமான நிர்ப்பந்தம்) அழகு என்பது ஒரு தனிப்பட்டதான தன்மையாக அன்றி அனுபத்தின் உருவத்தை உருவாக்குவதில்தான் என்பது ஒன்று—அதாவது அழகின் யதாஸ்தானம் "அழுக்காகவும்" இருக்கலாம் என்பது.

*கவிதை 7:* இங்கு படிமம் மிகவும் குதர்க்கமாகச் செயல்படுகிறது. மூக்கில்லாத முகம்; பிறகு அதே படிமம் "மூக்கைப் பொருத்தி" வைப்பதில் வேறு திசையில் திரும்புகிறது! சுதந்தரமாக சுவாசிக்க முடியாதா? என்னு

டைய மூச்சுக் காற்றுக்குமுன் நீங்கள்? (பாரதி பாடலில் இருந்து ஒரு வரியின் சூக்ஷமமான எதிரொலி) செல்லப்பா பாஷையில, குறியீடு இங்கு மிகவும் சூக்ஷமமாகச் செயல்படுகிறது. இங்கும் shock tacticsதான்.

கவிதை 8: இதற்கு "பதி" விளக்கம் தந்துவிட்டார். வேறு தேவையில்லை.

## II

"கசடதபற"க் கவிஞர்களில் முதல் நிற்பவர் ஞானக்கூத்தன் என்பது என் அனுமானம். அது எப்படியாவது இருக்கட்டும்; புதுக் கவிதை என்பதுதான் என்ன? இதில புரிகிறது—புரியவில்லை என்பதுதான் என்ன? புதுக்கவிதை என்று தனியாக தரத்தின் அடிப்படையில் ஒன்றில்லை; கவிதைதான் மிஞ்சுகிறது. கவிதை என்பதே முடிவு பெறாத, தொடர்ந்து செல்லும் ஒரு அனுபவச் சரடு. (இலக்கியமே சரடு திரிபபதின்றி வேறென்ன?) கவிதை "அனுபவ—பரிவர்த்தனம்" என்றால் இதில் இந்தப் புரியவைக்கும் அம்சம் என்ன? அனுபவங்கள் சந்திக்கையில் ரஸனை சூடுபிடிக்கிறது. இதற்கு அனுபவ பூர்வமான இலக்கிய ஞானம தேவை; ஆனல் அனுபவம் இறைந்து கிடைக்கிறதே என்றால் அது வேறு விஷயம்; அனுபவத்திற்கு இலக்கியம் ஒரு உருவம் கொடுக்கிறது என்றால், இலக்கியத்தின் கருவி பாஷை; பாஷை அர்த்தத்தில் இருந்து விடுபட முடியாது; பின் என்னதான் சொல்கிறேன் என்றால், இலக்கியத்தில் அனுபவம் எவ்வளவு முக்கியமோ, உருவமும் முககியம் என்பதுதான்; இன்னொரு வகையில் சொல்வதென்றால், அர்த்தம் இருக்கிறது ஒரு இலக்கியப் படைப்பில் எனறால், அர்த்தத்தில்-இருந்து—வேறுபட்ட— ஒன்றும் அதில் இருக்கிறது என்பதுதான். ஞானக்கூத்தன் கவிதைகளில் கிண்டல் ஒரு அம்சம் என்றால், பாஷை பரிபாஷை ஆவது வேறு ஒரு அம்சம்; இந்த எட்டுக் கவிதைகளை வைத்துக் கொண்டு பார்த்தாலும் இவைகள் தென்படுகின்றன. ஒவ்வொரு எழுத்தாளனும் தான் செய்வதைப் பற்றிப் பேசியும் எழுதியும் "அறியாமை"க்குப் பதில் சொல்லிக் கொண்டிருக்கிறான். எல்லாம்தான் தேவைப் படுகிறது.

இலக்கியமே ஒரு அனுபவத் தொடர் என்றேன்; பாஷை பிரதானம் என்கிறேன்; உருவம என்பதையும் சேர்த்துக் கொள்ளுங்கள். விஷயத்தை விட்டு உருவத்திற்கு வந்தால்? இந்தக் கவிதைகளில் திருமூலர் உருவம் பளிச்சிடுகிறது—ஒரு சொல்லை விதவிதமாகச் சொல்வதில், திரும்பத் திரும்பச் சொல்வதில் ஒரு அழுயசமான தொனியில் சித்தர்களின் ஆதிக்கம். பேச்சுச் சந்தம் அடிபடுகிறது; ஒரு ஓசை ஒழுங்கு இருக்கிறது; படிமம் படிமமாகவும், படிமம் குறியீடாகவும் வருகிறது. படிமம் என்பதே கண்ணில் தெரிவது என்பது மாத்திரமில்லை; கண்மூலம் ஒன்று வேறொன்றாகவும், அது மற்றொன்றாகவும் பரிணமம் அடைகிறது. தனியான ஒரு வார்த்தையே கவிதைக்குப் பலம் தருகிறது. "விழிக்கிறான்" என்பது எனக்குக் குறளை நினைவுறுத்தி ஒரு தனி அர்த்தத்தைக் காட்டுகிறது; 3-ஆவது கவிதையில் "போட்டு" என்பதின் இருமுறைப் பிரயோகத்தில் பால் விவகாரம் ஒரு பரந்த அர்த்தத்தில் இயங்குகிறது. இடக்கரடக்கலை உடைததெறிவதும் உடலை ஏற்றுக்கொள்வதுதானே. இது தமிழில் அனுபவத்தின் (இலக்கியத்தில்) எல்லையை விரிவுபடுத்துகிறது. நான்காவது கவிதையில் சிவராமூ பாஷையில்.

இது நிகழ்ந்த சமயம்

இடமற்ற

மனோவேளை

அனுபவத்திற்கு உருவம் கொடுப்பதுதான் இலக்கயம் என்றால், உருவத்திற்கு உருவம் உண்டு என்கிறார்கள். இது விஷயத்திலிருந்து விலகி இருப்பதாகச் சொல்கிறார்கள். பாஷையைக் கையாளும விதம், நடை, படிமம், குறியீடு இவை செயல்படும் விதம், தொடர்ந்து வரும் இலக்கியச் சரடின் விதவிதமான "ஒலி"கள், உருவத்தின் சிற்பரமான அமைப்பு—இவைகள் மூலம்தான் உருவம் உருவாகிறது. இத்துடன் அனுபவத்தின் அழுத்தம் ஒன்று சேர்கையில் கவிதை சிறப்படைகிறது. கவிதையில் சமகாலச் சூழ்நிலை இருக்கிறது என்றால் காலம்—இடம் என்ற தத்துவங்களைக் கடந்த ஒரு நிரந்தரமும் இணைகிறது. (மேலும் இக் கட்டுரையில் பல இடங்களில் நவீன உத்திகளை—படிமம், குறியீடு, த்வனி—இவைகளை பழைய உத்திகளான உவமை, உருவகம், உபமேயம், சிலேடை இவைகளுடன் தொடர்பு படுத்தியிருக்கிறேன். இவை எவ்வாறு வேறுபடுகின்றன எனபதை விளக்கிக்காட்டவேண்டியது பண்டிதர்கள் தொழில் தமிழ்ப் பண்டிதர்கள் நவீனத் தமிழ் இலக்கியத்தில் கவனம் செலுததவேண்டியது ஒரு அடிப்படையான தேவை) இவைகள் ஞானக்கூத்தன் கவிதையில் சிறப்பாக அமைந்திருக்கின்றன என்பது என் அனுமானம் என்றாலும் புரியவில்லையே என்றால் கவி சொல்வது போல்

"கொஞ்சம் புரிந்ததா?

தெரியாது!

போகட்டும்."

# நகுலனின் "நினைவுப் பாதை"*

அசோகமித்திரன்

சில மாதங்கள் முன்பு சென்னை நகரத்தின் ஒரு இலக்கியக் குழுவின் சார்பில் அந்த மாதத்தில் வெளியான தமிழ்ச் சிறுகதைகளில் சிறந்ததைத் தேர்ந்தெடுக்கும் பொறுப்பு எனக்குத் தரப்பட்டது. அந்த மாதத்தில் ''நகுலன்'' எழுதிய ''அயோத்தி'' என்னும் சிறுகதை வெளியாகியிருந்தது. எனக்கு அதை அம்மாதத்து சிறந்த சிறுகதையாகத் தேர்ந்தெடுக்க எவ்வகையிலும் தயக்கம் இல்லை. அதற்கு அடுத்த சிறந்த கதையானது ''அயோத்தி''க்கு வெகு தூரம் பின்னல் இருந்தது. அந்தரங்கப் பூர்வமாகத் தமிழ்ப் படைப்பிலக்கியத்தில் ஆர்வம் கொண்ட சில இலக்கிய அன்பர்களுக்குக் கூட இத்தேர்வு சிறிது குழப்பத்தை அளித்தது. ஆனால் அக்கதையை எங்களுக்குள் விவாதித்து, அதன் சுருதியையும் தாளத்தையும் தெரிந்துகொள்ள ஓரிரண்டு குறிப்புகள் கிடைத்தவுடன் யாருக்கும் ''அயோத்தி''யைஏற்றுக்கொள்ள எந்தத் தயக்கமும் இல்லாமல் போய்விட்டது.

இப்போது ''நகுல''னின் அடுத்த இலக்கியப் படைப்பாக அவருடைய புது நாவல் ''நினைவுப்பாதை''யைப் படிக்கும் வாய்ப்பு எனக்களிக்கப் பட்டிருக்கிறது. இதை என் வழி வந்த இலக்கிய அனுபவங்களில் மிகவும் குறிப்பிடத்தக்கதாகச் சொல்வதில் எனக்கு இரண்டாம் அபிப்பிராயம் கிடையாது. ''நினைவுப் பாதை'' தமிழ் உரைநடைப் படைப்பிலக்கியத்தில் ஒரு விசேஷ இடம் பெறும் என்பதில் எனக்குச் சந்தேகம் இல்லை. இப்படி ஒரு சிறந்த நூலை எதிர்மறைகள் கொண்டே நான் எழுத நேருவதற்கு நமது தற்காலத்து எழுத்துலகத்தில் செல்வாக்குப் பெற்றிருக்கும் ஆசிரியர்கள், தற்காலத்து விமர்சகர்கள். எண்ணிக்கையையோ விளம்பரத்தையோ கண்டு அந்த எண்ணிக்கையை இன்னமும் பெரிதாக்கும் தமிழ்வாசகர் உலகம் -இவர்களும் காரணம் என்று நான் உணருகிறேன். உரைநடையும் படைப்பிலக்கியமும் பெரிதும் முன்னேறியிருக்கும் மற்ற மொழிகளின் படைப்புகளைப் படித்து ரசிக்கும் தமிழர்களும் தமிழ் மொழியில் வரும் படைப்புகள் சம்பந்தப்பட்டவரை தங்களுடைய அளவுகோல்களையே ரசனையையே மாற்றி அமைத்துக் கொண்டு விடுகிறார்கள். இந்த அசாதாரணச் சூழ்நிலைதான் ''நினைவுப் பாதை''யை நான் வாசித்து முடித்தவுடன் என்னைச் சூழ்ந்து செயலிழக்க வைத்துவிடுகிறது. ''நினைவுப் பாதை''யை ஒரு நாவல் என்பதிலிருந்தே உராய்சல் கிளம்புவதை நான் உணரமுடிகிறது.

நாவல் என்பது மிகவும் பொதுப்படையான, விசாலமான ஒரு பிரிவு. நீளம் என்னும் அம்சத்தில் ஏதேதோ விவாதங்களுக்குப் பிறகு, ஐம்பது பக்கங்களுக்கு மேல் போனால் நாவல் என்று அழைத்து விடலாம் என்ற கருத்தொற்றுமை அயல்நாடுகளில் ஏற்பட்டிருக்கிறது. விரிவாக ஒருவரின் அல்லது ஒருத்தியின் கதை என்றுதான் ஆரம்பித்தபோதிலும் இருநூற்றாண்டுகளில், அதுவும் குறிப்பாக இரண்டாம் உலகயுத்தம் முடிந்து இந்த இருபத்தைந்து ஆண்டுகளில் நாவல்களின் ஆரம்பகால இலக்கணம் மிகவும் மாற்றத்திற்கு உள்ளாகியிருக்கிறது. ஒவ்வொரு புது மாற்றத்தின்போதும் வரவேற்க ஐம்பது நபர்கள் இருந்தால் எதிர்க்க ஐம்பதினாயிரம் நபர்களும் ஸ்தாபனங்களும் இருந்தன. இந்த எதிர்ப்பையெல்லாம் மீறித்தான் மாற்றங்கள் சிறிதுசிறிதாக ஏற்பட்ட வண்ணம் இருந்தன, இருக்கின்றன. நாவல் இந்தியாவுக்கு இறக்குமதிப் பொருள். ஆதலால் வேறு நாட்டு மொழி நாவல் இயக்கத்தின் பாதிப்புகள் இங்கும் இல்லாமல் போகவில்லை. ''பிரதாப முதலியார் சரித்திர''த்திலிருந்து ''தலை முறைகள்'' வரை நாம் வந்திருக்கிறோம். ஆனால் இலக்கியப் பந்தயத்தில் நம்முடைய சராசரி நாவல் இன்னமும் சற்றுப் பின்னல் தான் வந்துகொண்டிருக்கிறது. இது பெரிய பாவம் இல்லை. ஆனால் இதுதான் சிறந்தது, எட்ட வேண்டிய சிகரங்கள் எல்லாம் எட்டியாகி விட்டது என்று நாம் திருப்திப்பட்டுப் போய்விடும்போதுதான் விபரீதம் விளைந்து விடுகிறது. இந்தச் சூழ்நிலையில் ''நினைவுப் பாதை'' தமிழ் நாவல் பரிணாமகதியினின்று

---

* நினைவுப் பாதை: (நாவல்) பக்கங்கள் 288. விலை ரூ. 6-00. ஆசிரியர்: நகுலன் வெளியீடு: தாஸ் புக் ஸென்டர். கேப் ரோடு, நாகர்கோவில்-1.

சிறிது விடுபட்டு, தமிழில், அதன் காலத்திற்கு முன்பு வந்திருக்கிறபோது, அதைப் படிக்குமுன் இப்பணியை நினைவுபடுத்திக் கொள்ள வேண்டியிருக்கிறது.

டயரி வடிவத்தில் எழுதுவதாகச் சொல்லித்தான் ''நகுலன்'' இப்படைப்பை ஆரம்பித்திருக்கிறார். கதையை ஆசிரியரே கூறுவது போல, பாத்திரமும் ''அவரே''. அதனால் இது ஆண்பாலானவனின் கதை. டயரி வடிவம் என்று கூறியிருப்பதற்கிணங்க இந்த நாவல் ஐந்து பாகங்களாக அடுத்தடுத்த கால கட்டங்களில் நிகழ்ந்த சந்திப்புகள், சம்பாஷணைகள், சாதாரணத் தன்மை பிசகிய மனநிலை ஏற்பட்ட நாட்கள் இவைகளை ஒரு தொடர்ச்சியாகக் கூறுகிறது. (நாவலின் அமைப்பை நாவலுக்கு வெளியிலிருந்து விவரிக்கும்போது இப்படித்தான் சொல்ல முடிகிறது. அதே சமயத்தில் இந்த விவரித்தல் நாவலின் உண்மையான தன்மையை எங்கோ ஓர் இடத்தில்தான் தொடுகிறது என்று அறிய முடிகிறது.)

விவாதத்திற்கு என்று இந்தப் படைப்பை பலப்பல நுண்ணிய இழைகள், வண்ணங்கள் தளங்கள் கொண்ட இந்தப் படைப்பை—ஒரு சுருக்கமான குறிப்பில கூறவேண்டி வரும் போது இதுவும் ஒருவனின் கதை என்றே சொல்லவேண்டும். ஆனால் அந்த ஒருவனுக்கு இன்னொரு சூக்ஷ்ம சரீரம் உண்டு. இது இரண்டும் தனித்தனியாகப் பிரிந்து ஒருவரோடு ஒருவர் விவாதம் செய்து கொள்வார்கள். இருவரும் ஒரே மாதிரியான பார்வையும் தீக்ஷண்யமும் கொண்டவர்களாக இருந்தாலும் அவர்(கள்) கண்டு பிடிப்புகளை ஊர்ஜிதம் செய்துகொள்ளும் வகையில் ஒருவர் சந்தேகவினா எழுப்ப, இன்னொருவர் தர்க்க ரீதியில் விளக்கம் கூறுவார். இந்த நாவலில் அப்படித்தான் ஆரம்பம் இருக்கிறது. ''நகுலன்'' மறைந்து போக ''நவீனன்'' தொடர்ந்து சொல்கிறான். நவீனனின் கதை என்பதைவிட நவீனனின் கண்டுபிடிப்புகள் என்பது பொருந்தும். இக்கண்டுபிடிப்புகள் அநேகமாக எல்லாமே நண்பர்களைச் சந்திப்பதிலும் அவர்களோடு விவாதிப்பதிலும் ஏற்படுகின்றன. ஆசிரியரின் படைப்பும சூக்ஷ்ம சரீரியுமான ''நவீன''னின் கணடுபிடிபபுகள் இந்த நாவல் மூலம் வாசகர்களுடன் பகிர்ந்து கொள்ளப்படுகின்றன. ஆனால் இதை ஒரு சிந்தனைகள்—நாவல் (A novel of ideas) என்று சொல்லமுடியாது. சிந்தனைகள் ஊட்டும் நோக்கம் இந்த நாவலுக்கில்லை. மாறாக மனித இயல்பின சில அடிப்படைகளை இது விவாதிககிறது. முடிவுகள் வாசகனுக்கு விடப்பட்டிருக்கின்றன.

ஸ்தூலமான கதையும் இல்லை. ஸ்தூலமான கருத்தோட்டமும் இல்லை. இந்த இரண்டுவிதமான பாதுகாப்புகளும் இல்லாமல் நாவல் எழுத முடியுமா? அப்படி எழுதினாலும் உணர்வு பூர்வமான மன நிறைவு அளிக்கும் படி எழுத முடியுமா? இவை பூதாகாரமான கேள்விகள். ஆனால் (பந்தய) ஆட்டத்தை ஏற்றுக்கொண்டு நகுலன் படைப்பிலக்கியத்தில் சிறப்பிடம் பெறும் நாவலாக ''நினைவுப் பாதை''யை உருவாக்கியிருக்கிறார்.

கதாநாயகனை நவீனன் எழுத்தார்வம் பிடித்தவன். அப்பா திசையில் அவனுக்குத் தவிர்க்க முடியாத கசப்பு இருக்கிறது. அம்மாவிடத்தில் மிகவும் ஆழ்ந்த பாசம் இருக்கிறது. இது இரண்டுமே மிகவும் பூடகமாக, இப்படிச் சொல்லவேண்டும் என்று எண்ணாது சொல்லிவிட்டதுபோல சிறு சிறு கீறல்களில் கூறப்படுகின்றன. நவீனன் அறிந்தோ அறியாமலோ வேறு இரு பெரியவர்களுக்கு நேரிடையாகவும் மறைமுகமாகவும் இணக்கம் காட்டுகிறான். இரண்டு நண்பர்கள் வருகிறார்கள். ஒருவன் பிறவிக் கவிஞன். ஆனால் அவனுக்குத்தன்னால் எழுதவும் முடியுமா என்றுதான் முதலில் தோன்றுகிறது. ஆனால் அவன் அப்புறம் படைக்கும் கவிதைகள், அவனுடைய மன ஆழத்தை. திண்மையை, கலைப்பாங்கைக் கண்டு நவீனன் திரும்பத் திரும்பத் தனக்குள் வியந்து கொள்கிறான். இவர்கள் சந்திக்கிறார்கள், பேசுகிறார்கள், பிரிகிறார்கள். மீண்டும் சந்திக்கிறார்கள், பேசுகிறார்கள், பிரிகிறார்கள். பேச்சு, பேச்சு, பேச்சு. இந்த நண்பனின் குடும்பநிலைகளும் நிரந்தர வேதனை தருவது. அவனுடைய ஜீவனம் நல்லசம்பாத்தியமும் இல்லாமல் புத்தியையும் மழுங்க அடிக்கக்கூடியது ஓரளவு காற்றடித்த திசையில் மிதந்து செல்லும் இயல்பு இந்த நண்பனுக்கு. இதனால் ஒருகணம் நிம்மதி இருந்தால், அதையடுத்துத் தாங்கமுடியாத சிக்கல். இவை நடுவில்தான் அவன் தன் கவியுள்ளத்தை புரிந்து கொள்கிறான். கவிதை படைக்கிறான். சிரிக்கிறான். நவீனனுக்குத் தன் நண்பனுக்குத்தான் ஒன்றும் அதிகம் உதவ முடியாதபடி இருப்பதில் ஒரு வருத்தச் சாயை இருக்கிறது. ஆனால் எப்போது சந்தித்தாலும் ஒரே தொடர்ச்சியாகப் பேசிக் கொண்டிருப்பவர்கள் போல மனித உறவுப் பிரச்னைகளைப் பொதுப் படுத்தியே பேசுகிறார்கள். பார்க்கப் போனால் சொந்த விவகாரங்கள் பற்றிப் பேச்சே எழாமலே தான் இருக்கிறது. இவர்கள் இருவரும் வாழ்க்கை தரும் இடி—அடிகளை உணருகிறார்கள், எதிர்த்துப் போராடுவதில்லை; ஆனால் தப்பி ஓடியும் விடுவதில்லை. அவர்களுக்குள் ஒரு சிறு-அடைக்கல மூலை ஏற்படுத்திக் கொண்டிருக்கிறார்கள். வாழ்க்கையின் சூக்ஷ்ம அம்சங்களை விவாதிப்பதை அவர்கள் தங்களை மறக்கும் புகலிடமாகக் கொள்கிறார்கள். ஒரு

நாளைக்குச் சில நிமிஷங்களிலிருந்து சில நாட்களில் மணிக்கணக்கில் இந்தப் புகலிடத்தில் அடைக்கலம் அடைகிருர்கள். தங்களுக்குப் புத்துயிர் ஊட்டிக் கொள்கிருர்கள். விவாதிப்பது என்னும் செயல் அவர்களுக்கு மிக முக்கியமாக, மிகவும் அவசியமானதொன்ருகப் போய்விடுகிறது.

நவீனனின் இயல்பில் இலக்கியம் படைப்பது ஆழமாக வேரூன்றியிருக்கிறது. அத்துடன் உள்ள இன்னெரு பெரு மன விருக்ஷம் ஒரு பெண். அவள் பெயர் சுசீலா. சுசீலாவை ஞாபகப்படுத்த அவள் பெயர் மீண்டும், மீண்டும் வருகிறது. அவள் ஒரு பெண், அவளுக்கு நவீனன் தன்னைக் காதலிக்கிருன் என்று பேச்சளவில் எடுத்துச் சொலலப்படவில்லை. அவள் வேறு யாரையோ மணந்துகொண்டு விட்டாள். இது பல காதல் கதைகளில் வந்து போகும் சம்பவச் சேர்க்கை. ஆனல் ''நினைவுப் பாதை''யில் இது ஒரு அப்பட்டமான ஆண்-பெண் ஏக்கத்தைப் பிரதிபலிப்பதாக இல்லை. சுசீலா விசேஷப் பிறவியும் விசேஷப் பெண்ணும் இல்லை. நவீனன் இந்த நிறைவேருக் காதலை கழிவிரக்கத்தோடு பிறருடன் பகிர்ந்து கொள்வதில்லை. ஆனல அவனுகத் தன் மனத்தில் அவளுடன் ஏற்படுத்திக்கொள்ளும் உறவு, ஒரு ஆத்மசாதகன் தன்னுடைய விடுதலைக்குச் சாதனை ரீதியில் வைத்துக்கொள்ளும் இலக்கு அல்லது தெய்வச்சின்னத்துடன்கொள்ளும் உறவு போன்றதாகும். இதனல் சாதாரண நடைமுறையில் வேதனை தரக்கூடிய நினைவானது இங்கு சுயதரிசனம் பெறுவதற்குத் தீவிரமானதொரு கருவியாக இருக்கிறது. 'நினைவுப் பாதை'யில் சுசீலா பெருமளவு வரும் நான்காம் பாகம் முழுவதுமே கவிதாம்சம் மிகுந்து இருக்கிறது. கவிதை உருவத்திலும் பல பகுதிகள் இருக்கிறது.

சுசீலா
செத்துக் கிடந்தாள்;
கழுகொன்று
அவள் மார்பைக் கொத்திற்று;
அவள் ..........................
நோக்கி எறும்புக் கூட்டம்;
பிண வாடை
வயிற்றைக் குமட்டக்
கவிஞன்
கறுப்புத் தின்ருன்.........

என்று ஆரம்பிக்கும் கவிதை ஸ்தூலத்தில் சுசீலா சாகவில்லை. தான் அடையவில்லை என்று வெறுப்பில் அவள் சாகவேண்டும் என்று எண்ணுபவனல்ல நவீனன். இந்தக் கவிதையை அவன் நள்ளிரவில் எழுதிவிட்டு, பிறகு என்றென்றும் இதற்கு என்ன தாத்பரியம் என்று எண்ணிப்பார்க்கிருன். இது மட்டுமில்லாமல் இன்னும் எவ்வளவோ உருவகங்கள், படிமங்கள், வார்த்தைச் சேர்க்கைகள்; இவைகள் பலவற்றில் நமக்கு இயல்பாகிவிட்ட தர்க்கம், ஒன்றைக் காரணம் வைத்து அடுத்தது மனத்தில உதிப்பது, ஸ்தூல அனுபவ நினைவுகளுக்குள் அடங்கிப் போகும் மறு எண்ணங்கள் — இவையெல்லாம் இக்கவிதைகளால் சிதற அடித்து விடப்படுகின்றன. சாந்தமும், பயங்கரமும், உணர்ச்சி வசப்பட்ட பாசமும், தத்துவ ஞானியின் அலட்சியமும் கொண்ட ஒரு அபூர்வக் கலவையில் இக்கவிதைகள் முற்றிலும் புதிதான இலக்கிய அனுபவத்தைக் கொடுக்கின்றன. பொதுவாகப் பழக்கப்பட்ட அனுபவமில்லையாதலால் இதை இனம் பிரித்துக் கூறுவது இயலாதது. இந்த அனுபவம் தெரிந்தோ தெரியாமலோ ஒவ்வொருவனும் பெறுவதுதான். ஆனல் வார்த்தையளவில் இவ்வளவு விவரமாகவும், நுணுக்கமாகவும் எழுதப்பட்டது எந்த மொழிக்கும் ஒரு சாதனையாகும். இந்த சுசீலா கட்டம் நவீனன் மனவைத்திய நிலையத்தில் அடைக்கப்பட்டு குணமாகித் திரும்பிவரும் கடைசி பாகத்திற்கு எடுத்துச் செல்கிறது. மனநிலை பிசகிய தன்மையும் இதுவரை தமிழில் வார்த்தைகளால் எடுத்துச் சொல்லப்படாத அளவுக்கு, தரத்திற்கு, இந்த ''நினைவுப் பாதை''யில் சாதனை புரியப்பட்டிருக்கிறது. இந்த மனநிலை பிசகிய காலங்களிலும் நவீனனின் நினைவுகள் பலப்பல உருவ உத்திகளில் கவிதைகளாக வருகின்றன. ''சூசிப் பெண்ணே, ரோசாப் பூவே'' என்ற அடி ஒவ்வொரு முறை திருப்பிச் சொல்லப்படும்போதும் ஒரு அசாதாரண சோகத்தை உண்டு பண்ணுகிறது. இந்த நாவல் முழுவதுமே, எழுதும அந்தக்கரணம் மனதிற்குக்கொண்டு வரும் வாக்கியங்களால் எழுதப்படுகிறது என்று நவீனன் முதலிலேயே கூறுகிருன். அது உண்மையாகத்தான் இருக்கவேண்டும் என்கிற நம்பிக்கை வாசிப்பவனுக்குக் கடைசிவரையில் தகர்ந்து போய் விடாமல் இருக்கிறது அதேசமயத்தில் எவ்வித முன் திட்டம் இல்லாமல், முன் தயாரிப்பு இல்லாமல் இவ்வளவு கோர்வையாக, ஒரே மாதிரியான தரம் கொண்ட, நுணுக்க

மான பூரணமான, தர்க்கரீதியில் அப்பழுக்கு ஏற்படாத கோட்பாடுகள் இயல்பாகத் தெரிய ஒரு கலைப்படைப்பை எப்படி எழுத முடிந்தது என்று வியப்பு ஏற்படுகிறது. இதை எழுத சில வாரங்கள், மாதங்கள் ஆகியிருக்கும். குறைந்தது ஐம்பது முறையாவது மேஜைமீது எழுத உட்கார்ந்து சில பக்கங்கள் சில பகுதிகள் எழுதிவிட்டு எழுந்திருக்க வேண்டும். ஒவ்வொரு முறையும் இந்த மிக அரிதான மனநிலை, சாமானிய அன்றாட வாழ்க்கைக்கு அர்த்தத்தை விளைவிக்கும் மனநிலையை, ஆசிரியர் ஏற்படுத்திக் கொண்டு எழுதியது அசுர சாதனையாகும். அநேகமாக எல்லாக் கவிதைகளும், பல உரையாடல்களும் இதற்கு மேலான உருவமும் சேர்க்கையும் சாத்தியமா என்கிற ஐயத்தை எழுப்பக் கூடியதாக இருக்கின்றன.

இது ஒரு எழுத்தாளனின் நினைவுப் பாதை: அசலாக, சதையும் இரத்தமுமாக உயிர் வாழும் ஓர் எழுத்தாளனின் நினைவுப் பாதை. இதில் வேறு பலர் எழுத்தாளர்கள் வருகிறார்கள். அநேகமாக எல்லாரையும் அடையாளம் கண்டு கொள்வதனால் இந்த நாவலுக்குப் புது அர்த்தம் ஒன்றும் ஏற்பட்டு விடுவதில்லை. காரணம் அப்படிச் சிலர் இப்போது இருக்கிறார்கள் என்ற உண்மை தவிர அவர்கள் இங்கு பாத்திரங்கள் ஆவதில்லை. அவர்களை நினைவு கொண்டு, அவர்களுடைய சில பேச்சுக்கள், சில தன்மைகள் அவர்களிடமிருந்து தனிமைபடுத்தப்பட்டு விவாதிக்கப் படுகின்றன. மனிதர்கள், கருத்துக்கள், இவைகளைவிடச் சில தன்மைகள் தான் இந்த நாவலில் முக்கியத்துவம் பெறுபவை.

தமிழ் இலக்கியத்திற்கும் வேறுமொழி இலக்கியத்திற்கும் வெவ்வேறு அளவுகோல்கள் வைத்துப் பழக்கப்படாதவர்கள் இந்த நாவலைப் படித்துப் பெரு மகிழ்ச்சி பெறலாம். ஆனால் அந்தப் பழக்கத்துக்கு கட்டுப்பட்டவர்களுக்கு இந்த நாவல் எட்டாப் பழமாகத் தான் இருக்கக்கூடும்.

தமிழ் உரைநடை இலக்கியத்திற்கு "நினைவுப் பாதை" ஒரு புது மரபை அளிக்கிறது. தமிழ் நாவல்களில் மிக முக்கியமானது என்று மிகச்சில நாவல்களைப் பொறுக்கினாலும் அதற்குள் இது இருக்க வேண்டியது. இந்த இருபது இருபத்தைந்து ஆண்டுகளில் மிகவும் குறிப்பிடத்தக்க நூல் இது. ●

(நகுலனின் 'நினைவுப் பாதை'க்கு அசோகமித்திரனின் முன்னுரை)

# படித்துப் பார்க்க வேண்டும்

நாற்பது வருடப் பழைய புத்தகமொன்றைச் சென்ற வாரம் எடுத்துப்படிக்க நேர்ந்தது. 'தி ஸவுண்ட் அண்ட் தி ஃப்யூரி.' வில்லியம் ஃபாகனர் எழுதி 1929-ல் வெளியான நாவல். தலைப்புப் பதச் சேர்க்கை ஷேக்ஸ்பியருடையது. "Life is a tale told by an idiot, full of sound and fury, signifying nothing." மாக்பெத் தன் அரசையும் உயிரையும் இழக்கப் போவதற்குச் சிறிது முன்னால் அவனை உந்தி உந்தி அவன் கைகளையும் மனச்சாட்சியும் கறையாக்கிய அவன் மனைவி இறந்து விட்டாள் என்ற செய்தி கேட்டு இப்படி நினைக்கிறான். இந்த நாவலில் சப்தம் குறைச்சல். நான்கு பாகங்களாக எழுதப்பட்ட இதில் ஒரு பாகம் பிறவி ஊமை—முட்டாளாகவுள்ள ஒரு பாத்திரத்தின் வெளிப்பாடு.

ஆக வெவ்வேறு பாத்திரங்கள் அவர்கள் வாயிலாகச் சொல்லும் கதை. வெவ்வேறு காலத்தில், வெவ்வேறு தேதியில் சொல்லும் கதை. முற்பகுதி 7-4-1928; இரண்டாவது 2-6-1910; மூன்றாவது 6-4-1928; கடைசியாக ஆசிரியராகச் சொல்வது 8-4-1928. ஆரம்பத்திலேயே சிறிதாவது பிடி கொடுப்பதாகத் தோன்றும் பாகங்கள் கடைசி இரண்டும் தான். இந்த நாவலை சுமார் பதினைந்து ஆண்டுகளுக்கு முன்பு படித்தபோது ஒன்றும் புரியாத குழப்பமாக இருந்தது. இப்போதும்

பல பகுதிகளைத் திரும்பப் படித்தால்தான் விளங்குகிறது.

ஆனால் விளங்கத் தொடங்கியதிலிருந்து இது செயலற்று அயரவைக்கும்-கதை. மிகவும் வலுவாக, நுணுக்கமாகச் செதுக்கிய கதை. சொல்லப்பட்டது எதிலும் மேலோட்ட மழுப்பல் கிடையாது. மிகவும் திட்டவட்டமாக, நுணுக்கமாகச் செதுக்கிவிடப்பட்ட பாத்திரங்கள்.

இதில் கற்பனைச் சிறப்பும் இருக்கிறது, அபாரப் பயிற்சிச் சிறப்பும் இருக்கிறது. இது நல்ல வரவேற்புப் பெறுதது ஆசிரியருக்கு மிகுந்த வேதனை அளித்துத்தான் இருக்கு. இதையடுத்து எழுதிய நாவலை வேண்டுமென்றே கிளர்ச்சியூட்டுவதாகச் செய்து இந்த ஆசிரியர் கவனம் பெற்றார் என்று வரலாறு தெரிவிக்கிறது. இவருடைய சம காலத்திய இலக்கிய நக்ஷத்திரமாகிய ஹெமிங்க்வேயை விட அதிகமாக எழுதியும், இலக்கியப் பரிசுகளை இன்னும் முன்னதாகவும் அதிகமாகவும் பெற்றாலும் ஃபாக்னர் பெருத்த விற்பனைப் பட்டியல்களில் முதலிடம் பெற்றதில்லை. அவர் சுபாவத்தில் எழுத்தாளரின் எழுத்தாளர். அவருக்கு உத்திகளில் நிறைய ஈடுபாடும் நம்பிக்கையும் இருந்திருக்கிறது. கூடவே வலுவான, சிக்கல்கள் மிகுந்த கதையம்சமும் அவர் கவனத்தில் இருந்திருக்கிறது. இந்த நாவலின் கதைச் சுருக்கததைச் சொல்ல வேண்டுமென்றால் குறைந்தது ஏழெட்டுப் பக்கங்கள் வேண்டும்.

சுமாராக உள்ள எல்லா நூலகங்களிலும் கிடைக்கக்கூடிய புத்தகம். புதிதாக வாங்க வேண்டுமென்றால் மலிவுப் பதிப்பு ரூ. 7—30.

—சித்தலிங்கம்

மார்சல் அய்மின் (Marcel Ayme) சிறுகதைகளில் சுவாரஸ்யம் மட்டுமே முக்கியம் என்று இல்லை. சுவாரஸ்யத்தை மீறிய ஒரு பிரக்ஞை. அவருக்குத் தெரிந்த பிரஞ்சு வாழ்க்கைப் பற்றி, போரினால் பாதிக்கப்பட்ட மனித குணங்களைப்பற்றி வலுவான விமர்சனம் அடியோடி இருக்கிறது. மேலோட்டமாகவும் அய்மைப் படிக்கமுடியும், அதற்கு அப்பால் ஆழ்ந்து படிக்கவும் முடியும். இந்த "ஆழத்தன்மை"யில் அவர் பெரிய சாதனைகளை நிகழ்த்தாவிட்டாலும்.

அய்ம் நன்றாகக் கதை சொல்கிறார். சாதாரண வாசகனுக்குப் பழக்கப்பட்ட குரலில். சொல்லும் விதத்தில் புதுமையாக ஒன்றும் செய்துவிட வில்லை. ஆனால் உள்ளடக்கத்தில், அவர் பார்வையில் பழக்கப்பட்ட விஷயங்கள்கூட ஒரு நூதனத் தன்மையைப் பெற்றுவிடுகின்றன. அவர் கதைகளில் பல கனவு உலகத்திற்கே உரிய ஒரு விநோதத் தன்மையைக் கொண்டவை.

அது நிகழ்காலத்தின் நீட்சி என்றும் கொள்ளலாம். இந்த விநோதத் தன்மையை மிகக் கவனத்துடன் கையாளுகிறார். அசட்டுத்தனத்தையோ, அசிங்கத்தையோ நெருங்கி விடாத இந்த விநோதம் அவர் பார்வையின் தவிர்க்க முடியாத அம்சமாகத் தோன்றுகிறது. அரசாங்கம், குடிமக்களின் வாழ்நாளுக்குக் கட்டுப்பாடு கொண்டுவந்து, ஒவ்வொருவரும் அவரவருடைய பயன் தரும் வாழ்க்கையை ஒட்டி குறிப்பிட்ட நாட்கள்தான் ஒரு மாதத்தில் உயிருடனிருக்கவேண்டும் என்று நிர்ணயிக்கிறது. இதன் பல விஸ்தரிப்புகளே The Life Ration. ஒரு ஓவியனின் ஓவியங்கள் போஷாக்குச் சக்தி நிரம்பியவை என்பது திடீரென்று கண்டுபிடிக்கப்படுகிறது. அதன் தர்க்க ரீதியான விளைவுகளை Le Bonne Peinture சொல்கிறது. இப்படி பல மட்டங்களில் தூக்கலாகவோ அடங்கியோ இந்த விநோதத் தன்மை செயல்படுகிறது.

அய்ம் சிறுவர்களைப் பற்றியே நிறைய எழுதுகிறார். சிறுவர்களின் உலகம் அவரை மறுபடியும் மறுபடியும் ஈர்க்கிறது. இருந்தாலும் அலுப்பு தட்டுவதேயில்லை. ஒவ்வொரு கதையிலும் சிறுவர்களின் உலகம் தன் பல தோற்றங்களைக் கலைத்தன்மையுடன் நமக்குத் தருகிறது.

ஆர்ப்பாட்டமற்ற கிண்டல், நகைச்சுவை அவர் எழுத்தின் அழகான அம்சங்களில் ஒன்று. கவனத்துடன், கூர்மையாக அவர் அபிப்ராயங்கள் இயைந்து வெளிப்படுகின்றன.

இத்தனையும் அவருடைய Proverb and Other Stories தொகுப்பில் இருக்கின்றன. இதை வெளியிட்டவர்கள் The Bodley Head, London. இவருடைய இன்னொரு கதைத் தொகுப்பு, Across Paris.

—ஹரி

### மூளை மரங்கள்

மூளையைப் பிடுங்கி நட்டாற் போலே
சாலை ஓரம் கிளைத்தன மரங்கள்
உட்கை குவித்து நகையின் எடையை
மனமறிவது போல் தொலை வறிந்தாலும்
உடலைக் கருக்கிப் பாதம் பொளிக்கும்
வெம்மை தவிர்க்க மரத்தடி போவேன்
கைகளை நீட்டி புன் சிரிப்போடு
நல்லது வாவென மரமும் அழைக்கும்
தயங்கித் தங்கிய என்னுடன் மரமும்
சளசள வென்று பலவும் பேசும்
பொன்னிறச் சருகைத் தலைமேல் தூவும்
மெல்லிய இருட்டை மேலே போர்த்து
வெம்மை தணிக்கும் ஆறுதலளிக்கும்
கவட்டையைப் பிரித்துக் குழந்தையைச்
சுகமாய்
இடுக்கிக் கொள்ளும் கிழவனைப் போலே
விரித்த வேரில் இருக்கைக் கொடுக்கும்
எண்ண தடவி இறுகிய பின்னலாய்
போகும் தூரம் தொலைவில் சிரிக்க
மீண்டும் எழுந்து மேலே நடப்பேன்
மூளை மரத்தைப் பின்னே விட்டுப்
போகும் வழியில் பேசியணைத்துப்
பொன்னிறச் சருகை என்மேல் தூவும்
மூளை மரங்கள் ஆயிரமுண்டு
இருப்பினும் தங்கி நடத்தல் தவிர
நிரந்தரத் தங்கல் செய்வதற்கில்லை
மூளை மரத்தொடு இணைவதற் கில்லை.

பாலகுமாரன்

ஆசையாய் நெல்மணி கொரிக்கவிட்டு
''காசுதந்த கனவானின் அதிர்ஷ்டத்திற்கு
சீட்டொன்றைத் தேடிஎடு'' என்றேன்.
கூடுவிட்டிறங்கிய அந்தக்கிளி
கோபமாய் என்னிடம்
''போனஸ் தா! புரட்சி ஓங்குக!''
என்றது.

ஆர். வி. சுப்பிரமணியன்



ஓவியம் : பாஸ்கரன்

விளக்குகளை எரிய விட்டு
மழைக்கால இருளில்
இந்தப் பட்டணம் மூழ்க
மின்மினிச் சுமையோடு
கிராமத்துப் புளியமரம்
நினைவில் தெரிகிறது

விடுமுறை நாளின்
பட்டணத்துத் தெருக்களில்
அறுவடை முடிந்த வயலின் ஊடே
நெல்மணி தேடிப் போகும்
வாத்துக் கூட்டம் தெரிகிறது

ஆர். வி. சுப்பிரமணியன்

## பொய் விழி

அமர்ந்தவுடன்
பறந்த குருவி,
பார்வையில் இன்னும்
இருந்த குருவியாகத்
தெரிந்த கணத்தில்,
மீண்டும்
அதே குருவி
அமர்ந்து கொண்டதும்,
இருந்த குருவி போய்,
மறைந்த குருவி
பார்வைக்குத் தெரிந்தது.

## பட்டம்

பையன்
தெருவில்
காற்றைக் கோர்த்து
விரலை ஓட்டி,
வானைப் பார்த்தான்.

அங்கே பறந்தன
அவனுடைய குரல்கள்.

## நிலை

இரவு நகங்களின்
இரகஸிய வருடலால்,
மறந்து
துகில் அழிந்த மொட்டு,
திடீர் விடிவால்
முகம் சிவக்கும்—நடுங்கும்
உடனே
ஒரு கூந்தல் இருட்டுக்குள்
புதைந்து கொள்ளத்
துடிக்கும். ஆவலால்
தன்னைப் பறிக்கும் விரல்களைப்
பார்த்துப் பார்த்து
முள்மேல் நிற்கும்
பூ.

எஸ். வைதீஸ்வரன்

## சீப்பு

சிக் கறுக்க
சிக் கறுக்க
பூமா தேவியின்
புனிதச் சிகையில்
மாதர்
சிக்கறுத் தெறிந்த
கூந்தல் சுருள் போல்
சிக்கிற்குமேல்
சிக்கு.
சீப்பான சீப்பெல்லாம்
ஒடித் தெறிந்த
இத்தகைய சிகைக்கு
ஒத்த சீப்பொன்று
உருவாக்க
யாரால் ஒக்கும் இனி.

## கொசுக்கள்

கொட்டாரத்திற்குள்
கொசுக்கள் புகுந்து
ஏவலர்
காவலர்
போன்ருர் சிலரைக்
கடித்து விட்டுப்
பாவலராகப்
பறந்து மறைந்தன.

ஷண்முக சுப்பையா

## பார்வை

நாற்காலிச் சாய்வில்
சுவற்றின் வெள்ளை.
வெள்ளையில் நகரும்
பூச்சியின் கருப்பு
என்னைப் போலவே ஒரு
பல்லியும் ரசித்ததால்
பளிச்சென மாறிய
வெண்மையின் வெறுமை.
பல்லியின் வயிற்றிலே
பூச்சியா, நாஞ?

சுப்ரமண்ய ராஜு

### அவளின் பார்வை

காயங்களுடன்,
கதறலுடன்—ஓடி
ஒளியுமொரு பன்றியைத்
தேடிக் கொத்தும்
பசியற்ற காக்கைகள்.

### இன்னொருநாள்

கவலேயுடன் படுத்தவன்,
மேலெல்லாம் தடித்துப்போய்
புழுத்துப்போய் ஒழுக—
அடுத்துப் படுத்தவனே
எழுப்பினேன்.
கனவை நனவாக்கிக்
கொடுத்தான்.

### ''இந்தியா! எனது சுதந்திர இந்தியா!''

நிலாவைக் காட்டி,
மியாவ்'வைக் கூட்டி,
நாயை அழைத்தாள்.
வந்த ஓநாய்களிடம்,
உண்ண மறுத்த குழந்தையைத்
தின்னக் கொடுத்துத்
திரும்பினுள் 'அம்மா'

### அலேகள்

கோபத்துடன் சத்தமிட்டன,
''என் ஆழங்களுக்காய்
பயப்பட்டுத் தொலே.''

கலாப்ரியா



ஓவியம் :
பாஸ்கரன்

## வெள்ளங்கள்

விடியலில்—
வாசலில்,
குனிந்து கோலமிடுமவள்
நெஞ்சில்—இரு
மஞ்சள் தாமரைகள் பூத்தன
சூரியனைச் சுடுமுன்
நிமிர்ந்தாள்—நான்
சொன்னேன்—"இனி
பெரிய கோலமாய்ப் போடப்
பழகேன்."

கலாப்ரியா

## 'ப்ளேக்'

நிறத்தில் கறுத்த எலிகள்
நின்று, துடித்து,
வெறியேறிச் சிதறி,
வெளியேறி,
வீதிகள் தோறும் வெளிறிக்
'பிளீச்' சிட்டுக் குதறி,
அலறல்கள் வெறித்துத்
தனித்துத் திரிந்து,
கரைகின்ற குமுறல்கள்
வெறுமையிற் கரையச்
சரிந்து, மரிக்கும்—
மறுபடியும் மனிதரில்
ஜன்மித்து,
உருவில் பெருத்த இவர்கள்
நின்று, துடிக்க,
வெறியேறிச் சிதற........

கோ. ராஜாராம்

## அவன்

பத்துத் தலை ராவணனுக்கு
எங்களூரில்
கைகளும் இருபதுதான்.
வீரமிது கற்பும் இதுவென்று
இலக்கணம் செய்தவனும்
வேதங்கள் பிளந்தவனும்
கண்டவனும்—கண்டு
கடவுளை விண்டவனும்
அவன்தான்.
இருபது கைகள் நாவும்
இருநூறு இடமாய்.
பத்துத் தலைகள்
பார்த்து நுழைவதோ
இடம் பதினாயிரமாம்.
அதனால்
ராவணனை எதிர்த்து நிற்கும்
ராமனும் இல்லை
ஊரில்
ராவணனை வெறுத்தொதுக்கும்
சீதைகளும் இல்லை.

நா. விச்வநாதன்

## தூரப் பார்வை

மழை பொழியும்
ஞாயிறு பிற்பகலில்
என்ன செய்வதென்றறியா
மனிதனுக்கு
என்று மழியா’ நிரந்தரத்தில்
ஏனோ ஆசை?

## சங்கமம்

கழுவாத ஆஸ்பத்திரி வார்டுகள்
விழி ஒழுகாத காட்சி கண்ட முகங்கள்
முற்றத்தில் நிழலெறிந்த பெயர்
தெரியா மரங்கள்
முடிவும் முதலும் என்றான கணங்கள்.

தேவக்கோட்டை வா. மூர்த்தி

உச்சித் தலைமுதல்
உள்ளங்கால் வரைக்கும்
எத்தனை க்ரீம்கள்!
கருத்தடைக் குட்பட!
ஒழுக் கடுத்துக்
க்ரீமைச் சொன்னவன்
உண்மையில் ஞானிதான்!

O

ஒரு கம்யூனிஸ்ட்
கொடியேந்திக் கோஷமிட்டார்
ஒரு இன்ஸ்பெக்டர்
துப்பாக்கிச் சத்தமிட்டார்.
மந்திரி சமாதான
விளக்கம் சொன்னார்.
முதலாளி எங்கோ
சிரித்துக் கொண்டான்.

அவள் உள்பாவாடையில்
என் இனிஷியல்கள்
வண்ணான் போட்ட
உரிமைப் பட்டயம்.

O

ஒண்டுக் குடித்தனக்
கூட்டுக் குடும்பி
கண்டு பிடித்தது
ரப்பர் வளையல்.

O

காபரேக் காரியைக்
கட்டிக் கொண்டேன்.
மியூசிக் இன்றி
அவிழ்க்க மறுக்கிறாள்.

இது என் பேப்பர்
ரெயிலில் செல்கையில்
அடுத்தவர் தோள்மேல்
அரைமேய்ந் ததில்லை
விரைந்து விழுங்கும்
இரவல் ஷீட் அல்ல.
கைக்குள் வைத்து
மடித்துப் படிப்பேன்.
மேஜைமேல் போட்டு
விரித்துப் படிப்பேன்
பகலிலும் படிப்பேன்.
இரவிலும் படிப்பேன்
படிக்காமல் கூடத்
தூக்கி எறிவேன்.
இதுஎன் பேப்பர்.

நீலமணி

1

ஒருவனைக் கனவில் கண்டேன்
உதடுகள் பற்கள் கண்கள்
தலைமயிர் நகங்கள் கைகால்
அனைத்துமே மனிதன் போல
இருந்திடும் அவனைக் கண்டேன்.
கனவிலும் மனிதன் போலத்
தோன்றினால் மனிதன் தானா?

2

சூத்திரர் தெருக்களென்று
சொல்லுவார்.
ஏற்றாற் போல
மாட்டுத் தோல் உலரும்.
ஆடு
கோழிகள் நாய்கள் வாழும்.

முருங்கைகள்
பிள்ளை வாதக்
கிளைகளைத் தாழ்த்திக் கொண்டு
தெரிந்திடும் விட்டு விட்டுக்
குடிசையின் வாசற்பக்கம்.

'பசுபதி
ஆறும் பாரம்'
என்கிற சாக்குக் கட்டி
எழுத்துக்கள் தெரியும் குச்சு
இடச்சாரி,
பெரிய குச்சு.

மல்லிகை, முல்லை
சாணி முட்டைகள்
முருங்கைக் காய்கள்
விற்கிற பழக்கமுள்ள
வீடுகள் ஆங்காங்குண்டு.

தனிப்பட வரமாட்டாமல்
கடவுளின் துணையில்
அங்கே
வருகிறான் பார்ப்பான்
சாமி
வலம்வர வேதம் பாடி

ஞானக்கூத்தன்

## சற்றே உன் சிறகுகளை

காசுகளின் ஓசையில்
கரையும் காலை.
கூடும் வெய்யில்
மின்னல் கீற்றாய்
காதில் விழும் உன்
இளங்குரல்.

பொன்னுருகும் மாலையில்
வசந்தத்தளிர்களில் உன் குரல்
மறைந்து விடும். உன் சிவப்பு
மூக்கு மட்டும், "இங்கிருந்தேன்"
என்று காட்டி விட்டு.

இரவுகள், பொல்லா இரவுகள்,
தனியாய்ப் புழுங்கித் தவிக்கையில்
தலைகீழாய், கருப்பாய், அட்டைகள்
முறிப்பதுபோல் சிறகைத் தட்டி
இமைக்குள் பறக்கின்றாய் இங்கும்
அங்கும்,
யார்நீ? என்னைநீ வதைப்பதேன்?
சற்றேவுன் சிறகுகளை விரித்துக் காட்டி
விடு

பதி

# இந்திய ஓவியம்*

இந்திய ஓவியங்களைப் பற்றித் தமிழில் ஒரு நூல் எழுதி வெளியிடவேண்டுமென்ற ஆசிரியரின் ஆர்வத்தையும் அதன் வெளியீட்டுக்காக இருபது வருடங்கள் அவர் காத்திருந்ததையும் அறிந்து அவரைப் பாராட்டலாம். ஆயினும் 20 வருடங்கள் என்பது பெரிய இடைவெளி. எத்தனையோ துறைகளில் எவ்வளவோ மாற்றங்கள் ஏற்பட்டிருக்கலாம். இதே நூல் இருபது வருடங்களுக்கு முன்னால் வெளியிடப்பட்டிருந்தால் ஓவியங்களைப் பற்றிய விளக்கமும் சரி, ஆசிரியரின் நடையும் சுவையுள்ளதாக இருந்திருக்கலாம். அதோடு இருபது வருடங்களுக்கு முன்பு ஓவியத் துறையில் நம் கலைஞர்கள் மறுமலர்ச்சியைத் தொடங்கிய நேரம். அந்தச் சமயத்தில் இப்படி ஒரு செய்தி நூல் தேவையாக இருந்திருக்கலாம், ஆனால் இந்த நீண்ட இடைவெளியில் அஜந்தா ஓவியங்களைப்பற்றியும், சித்தன்ன வாசல், தஞ்சை, மொகலாய, ராஜபுத்திர, ஜைன ஓவியங்களைப் பற்றியும் ஆங்கிலத்தில் ஏராளமான புத்தகங்கள் வெளியிடப்பட்டு, திரும்பத் திரும்ப அந்த ஓவியங்களும் பலவாறு அச்சிடப்பட்டு, அது ஒரு பழைய விஷயமாக ஆறி வருகிற நேரத்தில் இது எந்த அளவுக்குப் பலரும் மெச்சக்கூடிய புத்தகமாக அமையும் என எண்ணத் தோன்றுகிறது.

இந்நூலை எழுதுவதற்கு எத்தனை பேர்களுடைய நூல்களைச்சாட்சியாகப்பயன்படுத்தியுள்ளார் என்பதைப் பார்க்கும்போது ஆசிரியர் உட்கார்ந்த இடத்திலிருந்தே படிப்பவர்களை அஜந்தா, எலலோரா, பாக் போன்ற இடங்களுக்கு அழைத்துச் செல்ல முயற்சித்திருக்கிறார் என்று தெரிகிறது. அவரே நேரில் சென்று பார்த்து அனுபவிக்க முடியாததை மற்றவர்களுக்கு, வேற்று நூல்களின் உதவியைக் கொண்டு உணர்த்த முற்பட்டிருப்பது, அவரது முயற்சிக்குக் கிடைத்த தோல்வியாகும். அதைவிடத் தானே முக்கியமான இடங்களுக்கு நேரில் சென்று பார்த்து, காலத்தினால் பல மாறுதல் கொண்டு நிற்கும் இடங்களையும், காலத்தை வென்று நிற்கும் ஓவியங்களையும் பார்த்து அவற்றுடன் மனம் விட்டுப் பழகி, பேசியிருந்தால், அப்பேச்சொலியின் சிறு பகுதியாவது நமக்கும் கேட்டிருக்கும். தேவையற்ற குறிப்புகளும், விளக்கங்களும் யாருக்குத் தேவை?

புத்தகத்தின் பெரும்பகுதி பண்டைய ஓவியங்களைப் பற்றித்தான் கூறுகிறது. மனித நடமாட்டம் இல்லாத பகுதிகளில் உள்ள ஓவியங்களைப்பற்றி எழுத்துக்களால் விளக்கினால் அதன் உண்மையான வடிவத்தை நாம் உணர்ந்து ரசிக்க இயலுமா?

அதற்குப் பதில் இன்றுள்ள ஓவியர்களைப் பற்றியும், அவர்களது படைப்புகளைப்பற்றியும் சற்று விரிவாக, விளக்கமாக எழுதியிருக்கலாம். வளர்ந்து வரும் நவீன ஓவியங்களையும் அவைகளைப் படைக்கும் கலைஞர்களைப்பற்றியும் மக்கள் ஒரு புதிராக கருதும் இத்தருணத்தில், அதைப்பற்றி, மக்கள் புரிந்துகொண்டு ஆர்வம் கொள்ளும் வகையில் எழுதியிருந்தால் நன்றாக இருந்திருக்கும்.

கிராமிய ஓவிய, சிற்ப (Folk Art) கலைகளிலிருந்து, அதனுடைய எளிமையான வடிவ அமைப்பை மூலமாகக் கொண்டு தனக்கென ஒரு பாணியை ஏற்படுத்தி புரட்சி செய்த ஜாமினி ராயைப்பற்றி ஓரிரு வரிகளில் குறிப்பிட்டிருப்பது ஒரு குறையே.

கூர்ஜர ஓவியங்கள் என்று ஆசிரியர் குறிப்பிடுவது 'ஜைன' ஓவியங்களைத்தானா? (Jain Miniatures) ஆசிரியர் கூறியிருப்பது போல் ஜைன ஓவியங்கள் தரத்தில் குறைந்தது அல்ல. சொல்லப்போனால் இன்றுள்ள ஓவியர்களுக்கு ஆர்வத்தைத் தூண்டிவிடக்கூடிய 'முன்மாதிரி' ஓவியங்களாக இருக்கக்கூடியவை. முகத்தைப் பக்கவாட்டில்வரைந்து மறைந்திருக்கவேண்டிய கண்ணை முகத்திற்கு வெளியே நீட்டி தனியாகக் காட்டியிருப்பது, ஓவியத்தின் அழகை அது அதிகப்படுத்துவதோடு மட்டுமின்றி, அவற்றைப் படைத்தவனுக்கிருந்த கற்பனைத்திறனையும், அன்று அவனுக்கிருந்த சுதந்திரத்தையும் தெளிவாக்குகிறது.

ஓவியப் பிரதிகளை (Reproduced Paintings) மொத்தமாக ஒரே இடத்தில் இணைக்காமல் சம்பந்தப்பட்ட கட்டுரைப் பகுதியுடன் இணைத்திருந்தால், படிப்பவர்களுககு உடனுக்குடன் பார்த்துப் புரிந்துகொள்ள வசதியாக இருந்திருக்கும்.

புராண இதிகாசங்களில் ஓவியம் இடம் பெற்றிருந்ததா என்பதற்கு ஆசிரியர் மிகுந்த சிரமப்பட்டுத் தேடி ஆதாரங் காட்டுவது அவசியமற்றது.

பல இடங்களில் அவரது நடையிலும், அவர் விளக்கம் தருகின்ற முறையிலும் குறை கண்டாலும் அவரது முயற்சியைப் பாராட்டுகிறேன். இந்த நூலைக் கல்லூரிகளில் துணைப் பாடமாக வைக்க அரசாங்கம் முன் வந்தால் அடுத்து வருகிற தலைமுறையினர் ஓரளவு ஓவிய உணர்வு பெறக்கூடும் என்று நம்புகிறேன்.

—கே. எம். ஆதிமூலம்

---

* இந்திய ஓவியம் (பக்கங்கள்: 130 : விலை: ரூ. 6-00)
ஆசிரியர்: மே. சு. இராமசுவாமி.
வெளியீடு: வாசகர் வட்டம். சென்னை-17.

# இந்திச் சிறுகதைகள்*

''நேஷனல் புக் டிரஸ்டி'ன் வெளியீடான 'கதா பாரதி இந்திச்சிறு கதைகள்' தொகுப்பி லுள்ள சிறுகதைகளும், இத் தொகுப்பிற்கு நாம்வர்சிங் அளித்திருக்கும் முன்னுரையும் இந்திச் சிறுகதையின் போக்கைப் பற்றி நாம் கணிசமாகத் தெரிந்து கொள்ள உதவு கின்றன.

முன்னுரையில், நாம்வர்சிங் வெவ்வேறு கால கட்டத்தில் இந்திச் சிறுகதையின் உள் ளடக்கத்தில், வெளிப்பாட்டில் நிகழ்ந்த மாறு தல்களை, அதற்குக் காரணமான எழுத்தாளர் களின் பட்டியலுடன் தருகிறார். ''கடந்த 70 ஆண்டுகளில் இந்திச் சிறு கதையின் வளர்ச்சியானது பல படிகளை விரைவாகத் தாண்டி முன்னேறி வந்திருக்கிறது. பிற மொழிக் கதைகளுக்கு இந்த நிலையை அடைய இரட்டிப்பு அவகாசம் வேண்டியிருந்தது என் பதைக் கவனிக்கவேண்டும்'' என்கிற நாம்வர் சிங்கின் கருத்தை நாம் தனியாக ஒரு கட்டு ரையில் ஆராய முற்பட வேண்டும்.

1915ம் ஆண்டு ''சரஸ்வதி''யில் சந்திரதர் சர்மா குலேரியின் சிறுகதையான ''உஸ்னே கஹாதா'' (''அவள் சொன்னாள்'' — இத் தொகுப்பில் முதல் கதை) தான் திடுக்கிடத் தக்க, பரபரப்பூட்டும் கதை அம்சத்திலிருந்து இந்திச் சிறுகதைகளை மீட்டு, உயிர்த் துடிப் புள்ள, உண்மை வாழ்வின் நிலைகளை நோக்கித் திருப்பிவிட்டது எனலாம் எனவும், இச் சிறு கதையின் மூலமாகத்தான் இந்திச் சிறுகதை உயிரோட்டமுள்ள மொழி நடையைப் பெற் றது எனலாம் எனவும் நாம்வர்சிங் கூறுகிறார். இவரைத் தொடர்ந்து இந்த கால கட்டத்தில் எழுத ஆரம்பித்த பிரேம்சந்த் ''இந்திச் சிறு கதைக்கு ஒரு குறிப்பிட்ட தனித் தன்மையை அளித்ததன் கூடவே அதை ஒரு பரிபக்குவ மான நிலையை அடையும்படியும்'' செய்துள் ளார். கிட்டதட்ட பிரேம்சந்துடன் சிறுகதைத் துறைக்கு வந்த ஜயசங்கர் பிரசாத் 'ரொமாண் டிக்' காதலை கதைக் கருவாகத் தேர்ந்தெடுப் பதிலும் அதற்கான 'ரொமாண்டிக்' சூழலைத் தோற்றுவிப்பதிலும் அதிக கவனம் செலுத்தி னார். சம காலத்தவர்களான பிரேம்சந்த், பிரசாத் ஆகிய இருவருக்குமிடையே இருந்த வேறுபாட்டினால் ஒரு காலத்தில் இந்திச் சிறு கதையில் பிரேம்சந்த் பரம்பரை, பிரசாத் பரம் பரை என இரு பிரிவுகள் இருந்தன. ஆனால் இந்த மேலோட்டமான கருத்துக்கு விஞ்ஞான ரீதியான ஆதாரம் எதுவுமில்லை. அதிகபட்ச மாகச் சொல்லப் போனால் இந்திச் சிறுகதை யின் இரண்டாவது மறுமலர்ச்சி காலத்தில் பிரேம்சந்த் சிறுகதையை யதார்த்த முனைப்பு டையதாகச் செய்ய முயன்றபொழுது, பிரசாத் உணர்வு பூர்வமான உருவம் தந்தார்.

பிரேம்சந்த் நிழலில் தோன்றிய ஜைனேந் திரகுமார், 'சிறுகதையைப் புற நிகழ்ச்சிகள், மிகுதியான சம்பவச் செறிவு ஆகியவற்றி லிருந்து விடுவித்து, அகவயமாக்கி மனித உள்ளத்தின் உணர்ச்சிகளின்பால் திருப்பி னார்.' 'பிரேம்சந்தின் பேனா முனையில் சமூகத் தீமைகளை எதிர்த்துப் போராடும் ஆயுதமாக விளங்கிய சிறுகதை ஜைனேந்திரரின் கரத்தில் ஒழுக்கம் பற்றிய தர்க்க வாதத்தை வெளிப் படுத்தும் சூட்சமமான சாதனம் ஆயிற்று.

காந்தீய லட்சியங்களில் அதிருப்தி கொண்டு மார்க்ஸ், ஃபிராய்ட் ஆகியோரின் கோட்பாடுகளில் உண்மையைத் தேடமுற் பட்ட தலைமுறையின் காலகட்டமான நான்கா வது 'தஷக்'கில் தோன்றியவர்கள் 'யஷ்பால்', 'அக்ஞேய்' என்கிற இரு எழுத்தாளர்கள். முன்னவர், வாழ்க்கையின் அவல நிலைக்கு பொருளாதார ஏற்றத் தாழ்வுகள் தான் காரண மென நம்பியவர். இரண்டாமவர், உள் மனத்தில் புதைந்திருக்கும் இச்சைகள், சிக் கல்கள் தான் இந்த அவலத்திற்கு மூல ஊற்று என நம்பியவர். இவ்விருவருடைய வழிகளும் வேறுபட்டதாயினும் இருவரும் கடந்த யுகத் தின் லட்சியவாத, ரொமாண்டிக் கலைகளி லிருந்து தங்களை விடுவித்துக்கொள்ள முயன் றவர்கள்.

நாடு சுதந்திரம் பெற்றபின், ஆறாவது தஷக்கின் துவக்கத்தில் உள்ளுணர்வின் விழிப் புடன் தோன்றிய எழுத்தாளர்கள் 'புதுக்

* 'கதாபாரதி இந்திச் சிறுகதைகள்'
விலை. ரூ. 8-25.
வெளியீடு:—நேஷனல் புக் டிரஸ்ட், இந்தியா, புதுதில்லி

கவிதை' என்பதைப் பின்பற்றி 'புதுக்கதை' என்று எழுதத் தொடங்கினுர்கள். ராங்கேய ராகவ், பணீஷ்வர்நாத், மோகன் ராகேஷ் போன்றவர்கள் இப்பட்டியலின் கீழ் வருகிருர்கள். இவர்களில் சிலர் வட்டார மணத்துடன் கூடிய அபூர்வமான படைப்புகளை, குணச்சித்திரங்களைப் படைத்தனர். வேறு சிலர் நகர்புறத்தில் மத்தியதர வர்க்கத்தினரின் வாழ்க்கைப் போராட்டத்தைப்பற்றி எழுதினர். இவர்கள் காலத்தில், இந்திச் சிறுகதை வாழ்க்கைப் பற்றிய கற்பனைக் கதை அளப்புகளிலிருந்து, 'அத்தாட்சி பூர்வமான அனுபூதி' 'அனுபவித்த யதார்த்தம்'என்கிற சித்தாந்தங்களுக்கு நகர்ந்தது. ஏழாவது 'தஷக்கில்' தோன்றிய எழுத்தாளர் பரம்பரை கதை சொல்லும் பரம்பரை வழிவந்த யதார்த்தத்தைப் புறக்கணித்தது. இவர்கள், சாதாரண மனிதனின், சராசரி வாழ்வில் விரவி நின்ற, முகமறியாத்தன்மை, ஆன்ம மறுப்பு, அமானுஷத்தன்மை, அச்சமூட்டும் திகிலின் அகல பாதாளத்தில், ஆழங்களில், இதுவரை பார்க்கப்படாமல் தவிர்க்கப்பட்டுவந்த ஆழங்களைத், துருவிப் பார்க்கலாயினர். ஸ்ரீ காந்த்வர்மா, மகேந்திரபல்லா, ஞானரஞ்சன, காசிநாத்சிங் தூத்நாத்சிங், ரவீந்திரகாலிலா, காம்தாநாத், சுதா அரோடா, ரமேஷ்பக்ஷி, பிரபோத் குமார், விஜய் செளஹான் போன்றவர்கள் இவ்வகையில் குறிப்பிடத் தக்கவர்கள். முன்னுரையில் நாம்வர்சிங் தரும் இத்தகவல்கள் தமிழ்ச் சிறுகதைப் போக்கை ஒப்பிட்டுப் பார்க்க உதவும்.

இத்தொகுப்பிலுள்ள கதைகள் சொல்லும் விஷயங்கள் நமக்குப் பழக்கமான, காதலிக்குத் தந்த வாக்குறுதியை நிறைவேற்றுதல், நடுத்தர குடும்பத்தின் வறுமை, வேலையிலிருந்து ஒய்வு பெற்ற மனிதனைச் சூழும் தனிமை உணர்வு; மரணபயம், வியப்புத்தருகின்ற சிறுவர்களின் மனோநிலை போன்றவைகள்தான். ஆனால் இந்தக் கதைகளை அலுப்பும், சலிப்பும் தோன்றாமல் நம்மால் படிக்க முடிவது விசேஷம். இந்தக் கதைகள் கலையுணர்வுடன் எழுதப் பட்டுள்ளன. அவைகள் ஏற்படுத்தும் பாதிப்புகள் ஆழமானதாக இருக்கின்றன. எதுவும் பிரச்சாரமாக, நீதிபோதனையாக உறுத்தவில்லை. அறிவுரைகளால், தர்க்க வாதங்களால் பொய்யான, விந்தையான உலகங்கள் சிருஷ்டித்துக் காண்பிக்கப்படவில்லை. பிரச்னைகளின் சாசுவதமும், நடைமுறையின் நிஜமும் கலாபூர்வமாகக் கையாளப் பட்டுள்ளன. கதைகளில் எழுதியவர்களின் கட்சி சார்போ, சித்தாந்த சார்போ பூதாகாரமாகத் தெரியவில்லை. இந்தக் கதைகளை எழுதியுள்ள ஆசிரியர்கள் எல்லோராலுமே தன்னை மறைத்துக் கொண்டு விஷயத்தை லாகவத்துடன், சுவாரஸ்யமாக, படிப்பவனுக்குச் சொல்லப்படுகின்ற விஷயத்தில் ஈடுபாடு தானுக உண்டாகும் வகையில் சொல்ல முடிந்திருக்கிறது. இதில்தான் கலைஞனின் வெற்றியும், அவனுடைய காரியத்தின் நிறைவும் இருக்கின்றன என்று தோன்றுகிறது.

இந்தக் கதைகளின் பொதுவான அம்சங்கள் இவைகள் என்றால், ஒரு சில கதைகளின் விசேஷ அம்சங்களையும் சுட்டிக்காட்டலாம். அமர் காந்தின் 'பகலுணவு'கதையில் ஒரு நடுத்தர குடும்பத்தின் வறுமை காட்டப் படுகிறது. இந்தக் கதையின் குடும்பத் தலைவிக்கு இருக்கிற ரொட்டியை எல்லாருக்கும் வயிறார பகிர்ந்து கொடுக்கவேண்டிய சாதாரண சங்கடத்தோடு குடும்பத்தில் ஒருவரைப்பற்றி மற்றவர் மனத்தில் நல்ல அபிப்ராயம் ஏற்படுத்த வேண்டிய கடுமையான பணியும் இருக்கிறது. இது ஒரு சிறப்பான அம்சமாகத் தோன்றுகிறது. இந்த கதையில் மூத்தமகன், தந்தை, இளையவன் என்று ஒவ்வொருவராக சாப்பிடத் தட்டின் முன் அமர்கிருர்கள். இந்த இடத்தில் இவர்கள் பூரணமாக அறிமுகமாவது இந்தக கதையின் இன்னொரு விசேஷம்.

மோகன் ராகேஷின் 'ரொட்டி'கதையில் வருகின்ற முன் கோபக்காரக் கணவனும். அவனுக்குத் தொண்டு செய்கின்ற மனைவியும் உண்மையாக, அந்தரங்கமாக நம்மைக் கவர்கிருர்கள். 'கல்லானாலும் கணவன்; புல்லானாலும புருஷன்' என்கிற தத்துவம்தான் என்றாலும் சுபாவமாக, சுத்தமாக இந்தகதை எழுதப் பட்டுள்ளது. இந்தக் கதையின் ஆரம்பத்தில் காட்டப்படுகின்ற கிராமப் புறத்தின் வெறிச் சோடியசாலை, அதன் சூழல் ஆகியவைகள் கதையில் தொடர்ந்த ஈடுபாடு ஏற்படுத்த உதவுகின்றன.

காசிநாத் சிங்கின் 'சுகம்' கதையில் வேலையிலிருந்து ஒய்வு பெற்ற போலாநாத் பாபு அந்தியில் மேற்கில் விழுகின்ற சூரியனுடன் தன்னை ஒன்று படுத்திக் கொண்டு தனிமை உணர்வும், மரணபயமும் சூழ அவதியுறுவது சொல்லப் பட்டிருக்கிறது. இந்தக் கதையில் ஓர் ஆழமான உருக்கம் கேவலப் படுததப்படாமல் சித்திரிக்கப்பட்டுள்ளது.

இந்தக் கதைகளை சரஸ்வதி ராம்நாத் இந்தியிலிருந்து மொழிபெயர்த்து இருக்கிருர். கதைகளுடன் ஒன்றிப்போக மொழிபெயர்ப்பு எந்த விதச் சங்கடமும் தரவில்லை. இந்தக் கதைகளைப் படிக்கிறபோது, பிரச்சாரக் கூச்சல், ஆர்ப்பாட்டம் இல்லாமல் வறுமை போன்ற விஷயங்களை கதைகளில் கையாண்டுள்ள கு. அழகிரிசாமி, சுந்தர ராமசாமி போன்ற எழுத்தாளர்கள் ஞாபகத்திற்கு வருகின்றனர்.

—ஜே. சகாதேவன்.

நாடகம், கூத்து என்ற இரு சொற்களும் இனி பழக்கத்திற்கு வரவேண்டும். கூத்து, தியேட்டர் அம்சத்தை உள்ளடக்கிய சொல். பிரக்டின் (Brecht) எபிக் தியேட்டரில் நம் கூத்தின் அம்சங்கள் இருக்கின்றன. இவை அன்னியப்படுத்தல் என்று பாராட்டப்படுகிறது. இது நாடக பாத்திரங்களுக்கும் அதை ஏற்று நடிப்பவர்களுக்கும் பார்வையாளர்களுக்கும் உள்ள உறவை மிக நுணுக்கமாகக் குறிக்கும் சொல்.

சரியான பார்வையில் இந்த அன்னியப்படுத்தல் என்ற உத்தியின் நீட்சியில் ஒரு தியான மலர்ச்சி இருப்பதைக் காணலாம். இது எபிக் தியேட்டரில் இருக்கிறது என்ற அர்த்தத்தில் சொல்லவில்லை. அதன் இலக்கணத்தில் இது ஒளிவாக இருக்கிறது. அது பூரண பிரக்ஞை நிலையைக் குறிப்பதாகும்.

மரப்பாச்சி நடிகர்களைக்கொண்டு இதை மேடையேற்ற முடியாது. இதற்கு நடிப்பிற்கு அப்பாற்பட்ட சில பயிற்சிகளை அளிக்க வேண்டியிருக்கும். நடிகர்களைப்பூரணபிரக்ஞையுள்ளவர்களாக மாற்றவேண்டும். முழுமனித நடிகர்களைக் கொண்டுதான் இத்தியானக் கூத்தை நடத்திக் காட்ட முடியும். பூப்படையாத ஒரு நாடகாசிரியனும் இதற்கு எழுதிவிட முடியாது.

'நாடகத்தை மீண்டும் நடிகனிடம் கொடு' என்னும் அமெரிக்க 'லா மாமா' தியேட்டர் குழுவினரும், போலந்துக்காரர் க்ரோடோவ்ஸ்கி (Jerzy Grotowski)யும் இவ்வகைக் கூத்தை நடத்துவதாகச் சொல்கிறார்கள். ஒரு நாடகத்தைத் தயாரிப்பதற்கு ஐந்துக்கு மேற்பட்ட ஆண்டுகளும் ஆகின்றனவாம். நடிகனின் முழுமெய்யில் நாடகம் பிரக்ஞையாய் மெய்யுணர்வாய்க் கலக்கிற வரையில் இந் நாடகத்தை அதன் நடிகர்கள் தியானிக்கிறார்கள். இது பரிபூரண பிரக்ஞை நிலையில் நடத்தப்படுவதால் நடிகர்களுக்கும பார்வையாளர்களுக்கும் திருப்பித் திருப்பிச் செய்யும் பார்க்கும் தொழில் காட்சிச் சலிப்புகள் தோன்றுவதற்கு இடமில்லை. தினம் புதிய உண்மைகளை மெய்ப்பாடால் அடையும் ஜீவசத்துடன் இருந்து கொண்டிருக்கும்.

இப்படி நாடகத்தை முற்றிலும் காட்சிப் படிமமாக்கப் பார்க்கிறார்கள் கலைவளரும் அன்னிய தேசங்களில். தியேட்டரிலிருந்து சொல்லைப் பிரித்து எறிந்துவிடப் பார்க்கிறார்கள். நாடகம் கண்ணால் காணக்கூடியது என்றதின் வளர்ந்த முடிவு இது. வார்த்தை பார்வையைத் தடுக்கிறது. ஒரு குழந்தைப் பார்வை அதிசயத்திற்கும் ஒரு மனிதப் பார்வைக் குருடிற்கும் உள்ள வித்தியாசத்தாலேயே இதை விளக்கிக் கொள்ளலாம். நாம் காட்சிகளைச் சொல்லாக மொழி பெயர்த்து ஏற்கனவே நம்மிடமுள்ள சொல்லாட்சிக் கட்டுக்குள் அடைத்து விடுகிறோம்.

ந. முத்துசாமி

இப்பிரச்சனையை எப்படித் தீர்ப்பது? இதற்குத் தீர்வு சொல்லை மீறிப்போவதுதான். சொல்லை முழுதாகக் கைவிட முடியாத நிலையில் சொல்லப்பட்டதற்கு மேல் போகும் குறியீடுகளை உண்டாக்கிக் காட்டுவதுதான் இதற்குத் தீர்வு.

சொல் பின்னால் வந்தது. அதற்கு முந்திய நிலைக்குப் போகப் பார்க்கிறது கூத்து. அது அதன் கலப்படமற்ற ஆரம்ப நிலைக்குப் போகப் பார்க்கிறது. சொல்லின்றியே தொடர்பு கொள்ளப்பார்க்கிறது. இது சொல்லில்லாத மிகப் பழைய இறந்த காலத்திற்குப் போவதில்லை. நிரந்தர நிகழ்காலத்தில் சொல்லைத் தாண்டி மனதை நிலை கொள்ளச் செய்வது இது. இது ஆதிமனிதனின் இழந்த சக்திகளைத் திரும்பப் பெறப் பார்ப்பது. உள்ளுணர்வை விழிக்கச் செய்து தொடர்பு கொள்வது. புதிதாய்க் கற்றவற்றில் உண்மையானதைப் பற்றிக் கொள்ளப் பார்ப்பது. மனிதனை மிருக நிலையிலிருந்து விடுவிப்பது. இவை தானே கண்டுபிடித்து உணரும் செயல்கள். சொல்லுக்கு அடங்காத உணர்வுகள் உண்மை அலுப்பைத் தந்து மனிதனுக்குப் பார்வை சோர்வதால் இல்லாததாகி விடுமா? அலுக்காதவர்கள், உண்மை நாடிகள் செய்யும் காரியங்கள் இவை. தியேட்டர் என்பது மறைந்திருக்கும் உண்மைகளைக் கண்டு பிடிப்பதும் தான். அணிந்திருக்கும் முகமூடிகளைக் கழட்டிப் போட்டுக்கொண்டேபோய், உண்மைச், சொரூபத்தைக் காண்பது கூத்து.

இது இழந்த காலத்தை நினைவு கூறும் வருத்தம் தோய்ந்த பழைய கதையில்லை. இது நிகழ்காலம். இது கண்முன் நிகழும் நிரந்தர நிகழ்காலப் படிமம்.

கூத்து பல உத்திகளின் தொகுப்பில்லை. அதுவே முழுஉத்தி. வாழ்க்கை என்ற தொகுப்பிலிருந்து ஒன்றை எடுத்து பார்வை கொள்ள மேடையில் நிகழ்த்திக் காட்டும் முழு உத்தி அது. நாடகாசிரியனின் நாடகம் மேடையேற உதவும் சில்லறை உத்திகளின் தொகுப்பில்லை கூத்து.

அது ஸ்தூலத்தால் ஸ்தூலத்தைக் கடந்து போகிற ஒரு சூட்சுமம். இச் சூட்சும்மும் மனதில் ஸ்தூலமாகும்போது அதையும் தாண்டி தேக்கமற்று இயங்குவது அது. மரத்துப் போகாமல் உயிர்த் துடிப்புடனும் உணர்வுடனும் மனிதனை வைத்திருக்கிற முழு உத்தி கூத்து.

இக் கூத்து சொல்லைக் கண்டிப்பானேன்? சொல்லுக்கு அகராதி அர்த்தம் தெரிகிற போது புரியாமல் போவது எதனால்? சொல் அகராதி அர்த்தத்தை இழந்து பரிச்சய

# கூத்து



வினை: தட்சிணாமூர்த்தி

மில்லாத பிரதேசத்திற்குக் கூட்டிக்கொண்டு போவதைப் புரிந்துகொள்ள முடியாததால் வருகிறது புரியவில்லை என்பது. சொன்னவனே அழைத்துக்கொண்டு போகவேண்டுமென்ற சோம்பேறித்தனத்துடன் இருப்பது தான் புதிய இடங்களின் பரிச்சய மற்றுப் போவதற்குக் காரணம். சொல், ஒருவனுடைய அனுபவங்களின் பாதையில் அவனைச் செலுத்தித் தேய்ந்த பாதையில் போக வைப்பதால அதை முற்றிலும் விலக்கிவிடவே பார்க்கிறது கூத்து. அவனுடைய பழைய அனுபவங்களிலிருந்து பிடுங்கி எடுக்கப் பார்ப்பது தான் இது.

சொல்லாலோ, சொல்லின்றியோ எப்படியாகிலும் கலை, இலக்கியங்கள் புதிய பிரதேசங்களுக்கு அழைத்துக்கொண்டு போகவில்லையென்றால் இருப்பதே போதுமானது.

'அப்பாவும் பிள்ளையும்' என்ற நாடகத்திற்கு சாமிநாதன் ஒரு பின்னுரை எழுதியிருக்கிறார். 'நடையில்' 17 வரிகளில் அடைப்புக் குறிகளுக்குள் முன்னும் பின்னும் இன்னும் இருக்கிறது என்ற சூசகத்துடன் பிரமாதமாக எழுதப்பட்ட செறிவான வரிகள் அவை. அதில் அவர் சொல்கிறார். 'நீங்கள் படித்தது இந் நாடகத்தின் ஒரு பின்னமாகிய வார்த்தைகளை மாத்திரமே' என்று. எனவே பின்னப்படாத வார்த்தைகள் இருக்கின்றன என்றும் உணர்த்தப்படுகிறது. வார்த்தைகள் பின்னப்பட்டவை என்பதும் உணர்த்தப்படுகிறது. (நாடகமாகப் பார்க்காமல் படிக்கப்பட்டது என்றும் அர்த்தப்படுகிறது.) வார்த்தை பின்னமாகவும் முழுதாகவும் கூத்தில் நிகழ்கிறது. ஒரே படிமத்தின் ஒரு கூறு சொல் என்பதில் பின்னப்பட்டும், முழுதாகவும் ஆகிறது. சொல் வேறு செயல் வேறாய் கூத்தாகா நிலையில் பின்னப்பட்ட குறையாகவும் சொல் ஆகிறது. சிதைந்த சொல்லுக்குப் பொருள், அகராதி அர்த்தமாக மிஞ்சுகிறது. உணர்வில் ஊறாது அகராதிச் சொல்லாய் நின்றால் அதை கூத்து ஒதுக்கத்தான் பார்க்கும்.

'அப்பாவும் பிள்ளையும்' நாடகத்தில் தியேட்டர் இருந்தாலும் அதன் சொல் பின்னப்பட்ட சொல். நினைக்கப்படும் சொல்லாய் உத்தியாகி விடுகிறது. அங்கு அதுவே அபிநயிக்கப்படுகிறது. இது இரண்டாம் பட்சமான பின்னப்பட்ட சொல்.

கையெழுத்துப் பிரதியாகக் கணக்கிலெடுத்துக் கொண்டால் இலக்கண சுத்தமாக எழுதப்பட்ட முதல் நாடகம் சி. சு. செல்லப்பாவின் 'முறைப் பெண்'தான். ஆனால் இலக்கண சுத்தமாக இருப்பது மட்டுமே இலக்கியமாகி விடுவதில்லை; (இலக்கண சுத்தமாக எழுதப்படும் செய்யுள்கள் கவிதையாகாததைப் போல்.) அது முதலில் பிரசுரமாகியிருந்தால ஒரு குறுகிய பிரதேசத்தின் சமகால இலக்கியச் சூழ்நிலையை வைத்துக் கணிககும் விமர்சனத்தில் அதுமுதல் நாடகமாகியிருக்

கும், மனோன்மணியம்போல. இனிமேல் தோன்றப்போகிறவைகளும் முதல் தமிழ் நாடகமாகலாம். கால வரிசையில்லாது தர வரிசையில் கட்டுப்படுத்த முடியாத நாடகமே நாடகம். அதன் பின்னால் எழுதப்படும் நாடகமேயான ஒன்றாலும் அதன் மதிப்பு மாறுவதில்லை. இதைப் புரிந்து கொள்கிற வாசகச் சூழ்நிலையில்தான் சம காலத்தில் சொல்லப்படுகிற விமர்சனங்கள் அதன் உள் நோக்கத்துடன் அறியப்படுகிறது. இல்லா விடில் தருமு சிவராமு மதம் மாறியாகத் தோன்றுவார். கல்லைக் காண்பவனுக்கு கடவுளைக் காண்பவன் மூளை பிறழ்ந்தவனாகத் தோன்றுவான். அன்றாட மனோதத்துவச் சிக்கலை அவிழ்த்துக் கொண்டுவர முடியாது.

செல்லப்பாவின் விமர்சனச் சொல்லி லேயே சொல்வதானால் அவருடைய 'முறைப் பெண்', ஒரு தட்டையான நாடகம்; அதை நடிக்கப் போகிற ஒரு 'அ. இ. உ.'க்குத்தான் மேடைக்கு வெளியில் கனபரிமாணம் உண்டு.

முழு நாடகமும் அதன் ஆசிரியருக்கு முன்னமேயே தெரியும் என்ற வசதியை அப் பட்டமாகப் பயன்படுத்திக் கொண்டிருக்கிறார். காட்சியாகக் கூடிய ஒரு தற்கொலைக் கட்டம் குரலாக்கப்படுகிறது. நாடகத்தில் ஜீரண மாகாத ஏப்பங்களாக தனிமொழிகளும் உண்டு.

'அப்பாவும் பிள்ளையும்'நாடகத்தில் அம்மா வின் குரல், அவள் குரலாகவும், இவன் மனக் குரலாகவும் விழிமூலம் பார்வையாளர் மனதில் கேட்க வைத்திருக்கவேண்டியது பிள்ளைக் குரலாக ஒலிக்கிறது.

'கணையாழி'யில் வந்த இந்திரா பார்த்த சாரதியின் 'காலயந்திரங்கள்' என்ற நாடகத் திலும் குரல் வருகிறது. நாடகம் முழுதும் வருகிறது. இதுவும் படிமமாக நிலை. இந் நேரங்களில் ஒரு நாடகாசிரியன் ஒரு நாடக இயக்குனனுக்குப்பின் கைகட்டிக் கொண்டு நிற்கவேண்டி வரும்.

நாடகம் ஒரு கூட்டுக்கலை என்பது மறுக்க முடியாத உண்மைதான். எல்லாம் வல்ல, சகல கலா வல்லுனனான நாடகாசிரியரானா லும் இது பொய்க்க, ஒரு ஒற்றைப் பாத்திர நாடகததைத்தான் எழுதவேண்டியிருக்கும். இது தமிழில் மலிந்த மேடைப் பேச்சாகிவிடும் அல்லவா?

இயக்குனன் மேடையில் உண்மையாக்கிக் காட்டுவது நாடகத்தின் சொல்லிலிருந்து என்ற அம்சத்தை நாடகாசிரியன் காப்பாற்றி னால் சொல்லைத் தவிர்க்கவேண்டும் என்ற கண்டனத்தைத் தவிர்க்கலாம். ஒன்றுக்கு மேற்பட்ட, இயக்குனனின் அர்த்தப்படுத்தல கள் என்றால் அத்தனைக்கும் சாத்யம் நாடகத் தில் இருக்கிறது என்றுதான் அர்த்தம். பாத்திரங்களின் அங்கவைப்பு முறைகளுக்கும் பாத்திரங்களின் மன ஒட்டத்திற்கு ஒத்து துல்லியமானவை.

இ. பாவின் பாத்திரங்கள் மேஜை நாற் காலிகளை மேடைக்குத் தூக்கி வருவது எதற் காக? காட்சி பிரிக்காமல் அவர் நாடகம் நடந்தாகவேண்டும் என்று அவர் திணித்த நிர்பந்தத்தாலா? அல்லது எந்தக் கருத்தை பார்வையாளன் மனதில் அறைய இதை ஓர் அன்னியப்படுத்தல் உத்தியாக ஆண்டிருக் கிறார்?

கால தேவனும் சிறுவனும் பிரவசனம் செய்கிறார்கள்.

இவருடைய மீனுவும் அம்பையின் 'பயங் கள்' என்ற, அஃகில் வெளியான நாடகத்தில் வரும் அஞ்சலியும் ஒத்த குணக்காரிகள்.

'பயங்க'ளில் உத்தி உத்தியாக மிஞ்சுகிறது. 'அப்பாவும் பிள்ளையும்' உத்தியைப்போல் என்று அவருக்கு வருத்தமில்லாமல் சொல்ல லாம். உரிய இடத்தில்தான் உத்தி பெயரை இழக்கும். இல்லாவிடத்தில் மிஞ்சிவிடும்.

'பயங்கள்' என்ற தலைப்பைக் கொடுத்த வுடன் அதன் வேருக்குச் சென்று பார்த் திருக்க வேண்டும். பெண்ணுக்கு விடுதலை என்றால் விபச்சாரத்திற்கு அனுமதி கேட்பது என்ற அர்த்தத்திலா ஆவது? தேவதாஸி மரபிலிருந்து இந்த அஞ்சலி எவ்வகையில் வேறுபட்டவள் என்பதை எங்கிருந்து பெறு வது? இன்னும் பல சமூக இயல், மனவியல் கேள்விகளுக்குப் பதில் சொல்லவேண்டியிருக் கும்.

சுவரில் இருக்கும் கண்ணின் ஓவியம் எதைக் குறிக்கிறது? அது எதன் குறியீடு? அலங்காரத்திரையா? பயங்களைக் கவனித்துக் கொண்டிருக்கும் விழித்த மனதின் பிரக்ஞைக் கண்ணா இக்கண்?

நாடகம் படிமமாகிறபோது பார்வை யாளர் திடுக்கிட்டு, தொடர்ந்த அதிர்ச்சியுடன் இக் கண்கள் தங்கள் மூன்றாம் கண்ணாய் உணரச் செய்திருக்கவேண்டும் ஆசிரியை. பார்வையாளரைப் பார்க்கப்படுவது என்ற பிரிவினை ஒழிந்த ஒற்றைக் கண் இக்கண் என்றாகியிருக்கவேண்டும் நெற்றிக் கண் என்றாகியிருக்கவேண்டும்.

இப்படிச் சொல் சிதைந்து பின்னப்பட்டுப் போவதால் கூத்து, சொல்லைத் தவிர்க்கப் பார்ப்பது நியாயமானது தானே?

கூத்து என்ற உச்ச நிலைக்கு நாடகம் பரிணமிக்க வேண்டுமானால் மேடையில் சோதனை செய்து பார்க்கிற காரியம் தவிர்க்க முடியாத தேவை. சொல்லோடும், சொல் லின்றியும் செய்து பார்க்கிற சோதனைத் தியேட்டர்கள் தவிர்க்கமுடியாத தேவை. அன்னிய தேசங்களில் 'தியேட்டரைத் தேடு வது' என்ற சொல் மிகவும் பழக்கத்தில் இருக்கும்போது தமிழில் யாராவது இதைப் பயன்படுத்தி இருக்கிறார்களா என்று தேடிப் பார்க்கவேண்டியிருக்கிறது. உலகத்தோடு சேர்ந்து தேடாதவரையில் மேலே கண்ட ஆசிரியர்கள் தமிழ்ச் சூழ்நிலையில் தங்களைப் பெருமையாக உணர்வது விமர்சகன் இட்ட பிச்சையை விருந்தாக உண்பதாகும். ●

இவன் எவ்வளவு காலம் உறங்கிக் கொண்டிருந்தான் என்பதில் இவனுக்குச் சரியான ஞாபகம் இல்லை. விழித்ததில் இடிந்து சரிய இருந்த ஒரு மண்டபத்தில் உறங்குவதாகத் தெரிந்தது. மேலே சிலந்தி வலை பின்னியிருந்தது. மூலையில் தூசு ரொம்பிய புஸ்தகங்களுக்குப் பக்கத்தில் மனித எலும்புகள் குவியலாகக் கிடந்தன.

எழுந்து வெளியே வந்தான். மங்கிய வெளிச்சமே எங்கும் வியாபிக்க இருந்ததில் பகலா இரவா எனக் கண்டுகொள்ள முடிவதாயில்லை. பார்வை கொள்ளுமளவுக்குச் சுற்றிலும் காடுகள் சூழ்ந்த ஒரு குன்றின் மேல் நிற்பதாகத் தோன்றியதில் இவனுக்கு யேசு கிறிஸ்துவின் மலைப்பிரசங்கம் ஞாபகத்துக்கு வந்தது. சரிவில் வெறும் பாறைகளே கிடந்தன.

இருளடைந்த காட்டின் வழியே இவன் பயணம் மேற்கொள்ள வேண்டியிருந்தது. இவனிடமிருந்தது ஒரேயொரு சிறிய அகல் விளக்கு மட்டும். காற்றற்ற நிசப்தத்தில் அது நிதானம் கொண்டு எரிய இருந்தது. முன் நீட்டிய குவிந்த கரங்களில் இவன் விளக்கை ஏந்தியிருந்தான். விளக்கு இவன் முகத்தைப் பிரகாச மடையச் செய்தது. பத்திரம் கொண்டு அதை எடுத்துச் செல்லும் முயற்சியில் இவன் தடுமாறுவான் எனத் தோன்றியது. மரங்களில் மோதுண்டு விடாமலிருக்க விளக்கு இவனுக்கு உதவும் என்று கருதியிருந்தான். சமயத்தில் விளக்கே இவனுக்குச் சிரமமாகியதில் விளக்கைக் காப்பாற்ற வேணும் எதனோடும் மோதிக் கொள்ளாமலிருக்க வேண்டும் என அறிய நேர்ந்தது.

ஒரு நீண்ட நாளைய அவகாசத்துக்குப் பிறகு—நாட்கள் எத்தனை என உணரமுடியாமல் இவன் வெளியே வந்தான். இவன் முகத்தில் கண்களுக்குப் பதில் செம்மையாகச் சுடர்விடும் இரண்டு ஜுவாலைகள் தெரிந்தன. தேகம் வெளுத்து இளைத்திருந்தது. ஒரு சோகைத் தோற்றம் கொள்ளக் கூட காண நேர்ந்தது. வயல் வெளிகளின் பக்கமாக இவன் நடக்கத் தொடங்கினான். நீர் நிறைந்த வயல்களில் தவளைகள் கத்துவதாயிருந்தன. சிள் வண்டுகளின் சத்தம் தொடர்ந்துகேட்டுக் கொண்டிருந்தது.

எங்கு செல்கிறோம் என்பதில் நிச்சயமில்லாமல், எங்கோ சென்றாக வேண்டுமென ஒரு அவசியமுள்ளவனைப் போல இவன் நடந்தான். இவன் நடையின் வேகம் அதையுணர்த்துவதாய் இருந்தது. வரப்புகளில் இவன் வழுக்க நேர்ந்தது. பலமுறை தடுக்கி விழுந்ததில் உடம்பு முழுதும் சேறுபடிந்தது. துடைத்துக் கொள்வதில் இவன் அக்கறை காட்டுவதாயில்லை. பார்வை நெடுந் தொலைவு காண நிலைகுத்தியிருந்தது.

வரப்பு பல திருப்பங்களுக்குப் பிறகு நீர் நிறைந்த ஒரு ஏரியில் முடிவுறுவதாக இருந்தது. இவன் விழிப்புக் கொள்ளு முன்பு மழைக் காலங்களில் ஏரிச்சரிவில் நீரை வாரியிறைத்து களிமண்ணை வழுவழுப்பாக்கிக் கோவணம் கட்டிய மாட்டுக்காரச் சிறுவர்களுடன் கரையிலிருந்து சறுக்கி வந்து தொப் தொப்பென்று தண்ணீரில் விழுந்ததாக ஞாபகம். விழுந்த பிறகும் ஈரம் சொட்டச் சொட்ட எழுந்து மறுபடியும் மறுபடியும் கரையில் ஏறி வழுக்கிக் கொண்டு வருவது. புட்டம் வலிகண்ட போதும் ஆட்டத்தில் அலுப்புத் தட்டியதில்லை. இவன் வெறுமையாயிருந்த ஏரியில் தன்னைக் காண நோக்கினான். இவன் அங்கே இல்லை என்பதில் மனது நிம்மதி கொள்வதாயிற்று.

சாரியான வீடுகள் நிறைந்த ஒரு தெருவுக்கு இவன் வந்து விட்டிருந்தான். இவ்வளவு சுளுவில் வரமுடியும் என இவன் எதிர்பார்க்கவில்லை. முகத்தில் மகிழ்ச்சி நிலவ இருந்தது. அசோக ஸ்தூபி மாதிரி உயர்ந்து நின்ற ஒரு கல் தூண் நிறுவிய பாருங்கல் மேடை இவனுக்குத் தெரிய இருந்தது. படிகளில்லா நெஞ்சுயர மேடை அது. இவன் சிரமப்பட்டு ஏற வேண்டியிருந்தது. மேடையைக் கைகளால் பற்றி எம்பி, நெஞ்சைப் பதித்துத் தொற்றி கால்களை மடித்துப்போட்டு ஏறியதில் பல இடங்களில் இவனுக்கு சிராய்ப்பு ஏற்பட்டது.

மேடையில் ஏறிய பிறகு இவன் நிற்க முயற்சி செய்தான். தூணைப் பிடித்துக் கொண்டுதான் இவனால் நிற்க முடிந்தது. ஒருவாறு நின்ற பிறகு வெறித்துக் கிடந்த தெருவை நோக்கினான். அமைதியில் சயனித்துக் கிடந்த தெரு இவனுக்குச் சோர்வைக் கொடுத்ததா உற்சாகம் அளித்ததா என்பது

**ஆர். இராஜேந்திரசோழன்**

# பரிணாமச் சுவடுகள்

தெரியவில்லை. முதலில் இவன் நடுக்கவுணர்வோடு கத்தினான். என்ன கத்தினான் என்பது இவனுக்குப் புரியவில்லை. ஏதோ கத்த முடிந்தது என்பதில் மட்டும் இவனுக்கு ஆறுதல். கத்தி முடித்த பிறகு இவன் பதிலுக்குக் காத்திருந்ததில் இவன் புலன்களைக் கூர்மைபடுத்திக் கொள்ள வேண்டியிருந்தது. ஒரு நிச்சயமற்ற நீண்ட அமைதிக்குப் பிறகு இவன் மறுமுறையும் கத்தினான். இப்படி இவன் ஏழெட்டு முறை கத்த வேண்டியிருந்தது. கத்தக் கத்த இவன் குரலில் ஒரு உயிர்ப்பு ஏற்பட்டதை இவனால் உணரமுடிந்தது. ஒவ்வொரு கத்தலுக்கும் பிறகு பதிலுக்குக் காத்திருக்கும் இவன் எதிர்பார்ப்பில் வேகம் கூடியது.

இவன் பல முறை கத்தி ஓய்ந்தான் என்பதில் இவனுக்கு நல்ல ஞாபகம். இவனுக்கு தேகமே விரிவு கண்டு புடைத்துக் கொண்டிருப்பதாகத் தோன்றியது. ஒரு ஆவேசம் கொண்டவனைப் போல இவன் கீழே இறங்குபவனாயிருந்தான். ஓட முடிகிற அளவுக்கு இவனுக்குக் கால்கள் வலுவோடேயிருந்தன. மங்கிய முற்றத்து இருளில் இவன் ஒவ்வொரு வீட்டின் கதவையும் தட்டுபவனாயிருந்தான். ஒரு வீட்டிற்கும் மற்றொரு வீட்டிற்கும் தட்டுவதில் இடைவெளியில்லாமல், இடையில் பதில் எதிர்பார்க்கும் நோக்கின்றி ஏறக்குறைய எல்லா வீட்டின் கதவுகளையும் தட்டி முடித்த பிறகு திரும்பவும் மேடைக்குத் திரும்பியதில், இவனால் ஒரு துள்ளலில் எகிறிக் குதித்து நிற்க முடிந்தது. வேகமாக ஓடியதில் இவனுக்கு மூச்சு வாங்க இருந்தது. முகத்தில் களிப்புகொள்ள இவன் ஆவலோடு எதிர்நோக்குபவனா யிருந்தான். ஆசுவாசம் கொண்ட நிதானத்துக்குப் பிறகு பதிலுக்குக் காத்திருந்ததில் நம்பிக்கையிழந்தவனாய் இவன் மறுமுறையும் கத்தியது ஒரு அழுகுரல் போல ஒலித்தது.

தெருமூலையில் மண்ணைச் சீய்த்து உறங்க இருந்த கறுப்பு நிற நாயொன்று அச்சப்பட்டு பின் வாங்கியதில் இவனால் அதைக் கண்டு கொள்ள முடிந்தது. இவனுக்கு விழிப்புக் கண்ட பிறகு முதல் காணும் உயிர் என்பதில் இவன் அந்த நாய்க்காக அநுதாபம் கொண்டான். அது பின் வாங்கிய திசையில் அதைக்காண இவன் இறங்கி ஓட வேண்டியிருந்தது. நீளத் தெரியும் சந்து வழியாக அது சென்று மறைந்திருக்கலாம்; அந்தச் சந்தில் நடப்பது மனிதர்களுக்குச் சாத்தியம் என்பதை இவனால் நம்ப முடியவில்லை. பிராணாப்பியாச முறைகள் பயின்றவனைப் போனறதொரு புலன் கட்டுப்பாட்டுடன் இவன் நடக்க வேண்டியிருந்தது. சந்து முடிவுறுமா என்பதில் இவனுகக்கு சந்தேகம். மயங்கிவிழ இருந்த சமயம் இவனுக்கு ஒரு வெளி தோன்ற இருந்தது. சுத்தமான காற்றை இவனால் சுவாசிக்க முடிந்தது.

வேறு ஒரு விசாலமான தெருவுக்கு இவன் வந்து விட்டிருந்தான் என்று தோன்றியது. பார்வையின் வீச்சு எட்டுமளவிற்கு இவனால் அதைக் காண முடியவில்லை. வீடுகள் இவனுக்கு நிம்மதி அளிப்பதாயிருந்தன. அசப்பில் மங்கிய வெளிச்சத்தில் பித்தளைப் பூட்டுகள் தொங்கும் கதவுகளைக்காண இவனுக்கு அதிசயமாயிருந்தது.

ஒரு கேளிக்கை விடுதியென மக்கள் கூடி ஆரவாரிக்கும் ஒலி காற்றில் சன்னமாய் இழையோடியது இவனுக்குக் கேட்டதா என நிச்சயம் இல்லை. நிச்சயம் செய்து கொள்ளு முன்பே கேட்டதான உணர்வு மங்கி இருந்தது. பிரமையாயிருக்கலாமோ என்று தோன்றியது. மறுமுறை கேட்பதற்கான தயாரிப்பில் செவிக்குக் கூர்மை கொடுத்துக் காத்திருந்தான். சத்தம் நிச்சயமானதாய் இருந்தது. எத்திசை கொண்டு எழுகிறது என்பதில் இவனுக்கு நிச்சயம் இல்லை. ஒவ்வொரு முறையும் ஒவ்வொரு திசை நோக்கி நடந்து இவன் திரும்பி வர வேண்டியிருந்தது. மேற்கே என நடந்து கிழக்கே உணரவும், கிழக்கே என நடந்து வடக்கே உணரவும் திடமற்ற தன்மையில் இவன் நீண்ட நேரம் உழன்று கொண்டிருந்தான். கடைசியில் வடமேற்கே என்பதில் இவன் கூர்மை தெளிவுபடுத்துவதாயிற்று.

தரையை முகர்ந்து செல்லும் ஒரு நாயினுடையதைப் போன்ற மோப்ப சக்தியுடன் இவன் செவிப்புலன் ஒலி கொள்ள நடக்க வேண்டியதாயிருந்தது. ஒழுங்கற்ற கட்டிடங்களுக்கு மேலே எழுந்த உயரமானதொரு மணிக்கூண்டுக்கும் அப்பால் என இவன் நிச்சயமாக அறிந்து கொண்டதில் இவனுக்கு சந்தோஷமுண்டாயிற்று. வழியெதுவென்று சிக்காத ஒரு கணம் இவன் தேங்கிநின்றான். தெரு நேரே சென்று ஒரு பார்வை தொலைவில் முடங்கிப் போவதாக இருந்தது. தெரு அங்கே திருப்பம் பெறலாம் என்று தோன்றியது. சற்றுவேகமாக நடக்கத் தொடங்கியதில் வளைவில் திரும்பி சில வீடுகளுக்கும் அப்பால் இவன் பெரியதொரு மைதானத்தைக் காண நேர்ந்தது.

ஒரு கோட்டையைப் போன்ற தோற்றமுடைய பெரியமதில்கள் சூழ்ந்த அரங்கை இவன் அடைந்திருந்தான். நுழைவாயிலில் பெரிய அலங்கார வளைவுகளோடு வருக வருக என எழுதிவைக்கப்பட்டிருந்ததில் வண்ண விளக்குகள் கண் சிமிட்டுவதாயிருந்தன. வாயிலிலோ சுற்றுப் புறத்திலோ யாரையும் காண முடியாததில் இவனுக்கு வியப்பு ஏற்பட்டது.

தயக்கம் கொள்ளச் சிறிது நேரம் காத்து நின்ருன். அனுமதியின்றி உள்ளே நுழைகையில், இவன் தடுத்து நிறுத்தப்படலாம் என்று தோன்றியது. நகரும் வேகத்திலேயே இவனுல் நடக்க முடிந்தது. வளேவுக்குக் கீழே சிறிது நேரம் யாரும் வருவார்கள் என எதிர் பார்த்ததில் இவன் கழுத்தை மட்டும் சுழற்றி நோக்கினுன். யாரும் இவன் கண்களுக்குத் தென்படுவதாயில்லே. சுதந்தரமாகவே இவனுல் நடக்க முடிந்தது.

இரண்டு பக்கமும் செங்கல் வீடுகள் வரிசையாகத் தெரிந்தன. ஓரங்களில் வெட்டி வளர்க்கப்பட்ட பூச்செடிகளில், தண்ணீர் தெளித்துக் கோலமிட்ட தெரு முற்றங்களில் யாரும் இவனே எதிர் கொள்ளலாம் என்று கருதியிருந்தான். விரியத் திறந்து கிடந்த கதவுகளுக்கும் அப்பால் சஞ்சலமற்ற நிச்சலனம் இவனுக்கு சந்தேகத்தையூட்டுவதாயிருந்தது.

பாண்டு வாத்திய முழக்கம் போன்றதொரு ஓசை இவனேத் தொடர்கிறது என நிச்சயம். இவன் வேகமாக அதை யெதிர் கொண்டதில் வீடுகளேக் கடந்து விட்டிருந்தான். இவனுக்கு நம்பிக்கை கொள்வது சாத்திய மற்றதாயிருந்தது. இவன் விழிப்புக் கொள்ளுமுன்பு கனவு கண்டு கொண்டிருந்தான் என்பது நிச்சயம். விழித்ததில் இவனுக்குக் கனவுகள் மறந்து போயிருந்தன. இவனுக விருப்புக் கொள்வதாலுலும் கனவுகள் தோன்றுவது இவனேப் பொறுத்த வரைக்கும் அசாத்தியமானதாய் இருந்தது. சுற்றிலும் மனித முகங்களே இவனுல் காண முடிந்தது. ஒரு திருவிழாக் கூட்டமென ஜனங்கள் கும்பல் கும்பலாய் அங்கங்கே திரண்டிருந்தார்கள். இவன் குதூகலம் கொண்டான். இவனே யாரோ பிடித்து பின்னுக்கு இழுப்பதாகத் தோன்றியது. இவன் திரும்பிப் பார்க்க அவசியமில்லாதவனுயிருந்தான். ஒழுங்கற்றுக் கிடந்த ஜனக்குவியலுக்கிடையே தோண்டப்பட்ட ஒரு அகழி என பாதை ஒழுங்குபட ஜனங்கள் விலகி நின்ருர்கள். சீரான நடை போட்டுச் செல்லும் வாத்தியக் கருவி தாங்கியவர்களின் அணிவகுப்பு இவனேக் கடந்து சென்றது. பின்னுல் வேலேப்பாடுமிக்க அழகியதொரு பல்லக்கு வியர்வை கசியும் தோள்கள் சுமந்ததில் திரைபோட்டுக் குலுங்கி நகர்வதாயிருந்தது.

இவன் நித்திரை கொள்பவனுய் நின்றதில் கூட்டம் பழையபடியே கூடிவிட்டிருந்தது இவனுக்கு மறந்து போயிற்று. இவன் விசித்தரம் கொள்ள, முடிவு இன்றி பல இடங்களில் நடக்க வேண்டியிருந்தது. ஜனங்களில் யாரும் இவனேக் கண்டுக்கொணடதாய்த் தெரியவில்லே. இவன் சுற்றிச் சுற்றி நடந்து கொண்டிருந்தான். இப்படிப் பல முறை சுற்றியதில் இவன் அலுப்படைந்திருக்க வேண்டியவன் சில இடங்களில் இவனேயறியாது நின்றுவிட்டிருந்தான். இவனுக்கு யோசிக்க அவகாசம் தேவைப் படுவதாக இருந்தது. பெண் தலேயும் பாம்பு உடலுமான நாக கன்னிகையை ஒரு டேராவில் காட்டுவதாக விளம்பரம் செய்திருந்தது. ஒரு பக்கம் மூன்று தலே மனிதனேயும் பெட்டியில் மறையும், உடுக்கை சத்தமிட்ட திசையில் கீரியும் பாம்பும் சண்டையிடுவதை இவனுல் காண முடியவில்லே. தாயத்து வாங்கி மடியில் வைத்துவரும் ஜனங்களுக்குப் பக்கத்தில் விஷஜந்துக்கள் வரையபபட்ட கலர் கித்தான்களில் 'பொம்மையில் வச்சா காசி'—'நாலணு வச்சா ஒரு ரூபா;' அரை நிர்வாண நடனம் காண க்யூ நீண்டிருந்தது. நீள் சதுரவடிவில் மூங்கில் தடுப்பு கட்டி, விரிப்பு விரித்து காசு பரப்பப்பட்ட மேஜைகளில் வளேயங்கள் விழுந்து கொண்டிருந்தன.

இவன் முன்னே சுற்று சடல்களும் தொட்டி ராட்டினங்களும் சுழல்வதாயின. மேலே அந்தரத்திலிருந்து கீழே பாதாளத்தில் இறங்குவதென தோற்றம் கொடுத்துத் தாழ வருகையில் அடிவயிற்றைக் கலக்கும் என்பது இவனுக்குத் தெரியும். பல்லேக் கடித்து பிரசவம் கொள்ளும் ஒரு பெண்ணின் வேதனே போல் அதைச் சகிதது மகிழும் சிறுவர்களன்றி முதியவர்களும் தொட்டியில் கிடந்தார்கள். விடிகையைக் கூரை மேலேறி அறிவிக்கும் ஒரு சேவலின் பார்வையில் இவன் சுற்று முற்றும் நோக்கத் தொடங்கினுன். உடம்பில் பெட்ரோல் ஊற்றிக் கொளுத்திக் கொண்டு வெகு உயரத்திலிருந்து குதிப்பதான ஸ்டேஜ் இவன் கண்களுக்குத் தோன்றுவதாக இருந்தது. ஒரு தாவலில் இவன் ஏணியை அடைந்தான் வேகம் கொண்டு ஏறியதில் பலமுறை இவன் கால் தடுக்குண்டது. ஒரு காலேத தூக்கி உயரேவைத்து மறு காலேத் தூக்குவதில் முட்டியை இடித்துக் கொள்ள வேணடியதாய் இருந்தது. மேலே, மேலே ஏறியதில் இவ்வளவு உயரம் என்று இவன் கணிப்பு கொண்டிருந்ததைக் காட்டிலும் அதிகமானதாய் இருப்பதாகத் தோன்றியது.

இவன் உயரே நின்றபோது இவனுக்கு மூச்சிறைத்தது. ஆயாசத்தோடு ஒரு முறை கண்ணேக்கினுன். முகத்தில் திருப்தி நிலவியது. மிகப் பெரிய குரலிலே இவன் தன்னுடைய அழைப்பை விடுத்தான். அந்த அழைப்பு ஜனங்களுக்கு எட்டட்டும் என விட்டிருந்த அவகாசத்தில தன்னே ஆசுவாசப் படுத்திக் கொள்ள நினேத்திருந்தான. அது தேவையில்லே போல் தோன்றியது. இவன் தொடர்ந்து அழைத்துக் கொண்டிருந்தான்.

குரல் ஒலி அலை அலையாகக் கீழே இறங்கிக் கொண்டிருந்தது. திரள் திரளாய் தள்ளாட்டத்தோடு அசையும் ஜனங்களில் எங்காவது இவன் குரல், பாதிப்புப் பெறுகிறதா என்னும் உன்னிப்பில் எப்போதாவது சில அவகாசங்கள் கொடுத்து இவன் காத்துக் கிடந்தான். இவன் குரல் தொடர்ந்து கொண்டேயிருந்தது.

சிலர் ஏதோ சத்தம் என்பதாகத் தலையைத் தூக்கிச் சுற்று முற்றும் பார்த்து பிறகு அப்பார்வையிலேயே அசிரத்தை கொண்டவர்களாய் வழியைப் பார்த்துக்கொண்டு நடந்தார்கள். குறைந்தது கழுத்து வலிக்குமட்டுமாவது அண்ணாந்தால்தான் இவனைக் காண முடியும் என்பது இவனுக்குத் தெரிய இருந்தது. இவன் அழைப்பதில் ஒய்ச்சல் கொள்வதாயில்லை.

எங்கோ ஒன்றிரண்டு நபர்கள் என கவனம் பெறுவதிலிருந்து கும்பல் கும்பலான ஜனங்களின் நடையில் தேக்கம் தெரிந்தது. தடை கொண்ட நீரோட்டம் என மோதுண்டு திரும்பியதில் குழம்பியஜனங்கள் அண்ணாந்து நோக்குபவர்களாயிருந்தார்கள். ஏறக்குறைய எல்லாருமே கீழே திரண்டு விட்டார்கள் என்பது இவனுக்கு நிச்சயமானபிறகு, இவன் கத்துவதை நிறுத்த ஒரு மகிழ்ச்சியில் அவர்களை நோக்கிக் கொண்டிருந்தான்.

முதலில் இவன் ஒரு பறவை என அவர்களுக்குத் தோற்றம் கொடுப்பதாய் இருந்தது. பல பேருடைய உன்னிப்புக்களுக்கும் அநுமான சம்பாஷணைகளுக்கும் பிறகு இவன் ஒரு மனிதன் என்பது அவர்களுக்கு நிச்சயமாயிற்று. இவனைக் கீழே இறங்கச் சொல்லி எவனோ ஒருவன் கத்தியதாகத் தோன்றியது. அப்படி ஒரு குரல் எழுந்தது மெய்தானா என்பதை இவனால் திடம் செய்து கொள்ள முடியவில்லை. அப்படியே பலரும் கத்துவதாகத் தெரிந்தது. அது நிச்சயமான பிறகு ஒரு பூரிப்பில் இவனுக்குப் படிகளில் இறங்கத் தோணாமல், நேராக அங்கிருந்து தண்ணீரில் குதிக்க இருந்தான்.

சளப்பென்று தெறித்த நீரின் அளவுக்கு அதிர்ச்சியில் பின் வாங்கிய ஜனங்கள் விசித்திரம் கொள்ள இவன் நீரிலிருந்து எழக் காத்து நின்றார்கள். இவன் ஈரம் வடியும் தலையுடன் கிணற்றின் விளிம்பைப் பிடித்துக் கொண்டு ஏறி வருவதில் நேசபாவத்தோடு சிரிக்க இருந்தான். இவனைப் பார்த்து நின்றவர்களுக்கு இவன் ஒரு விலங்கு எனத்தோற்றமளிப்பதாக இருந்தது.

இவன் ஆத்மாவிலிருந்து எழுந்த ஒரு குரலால் அவர்களை அழைத்தான். சிலர் இவன் அழைப்புக்குச் செவி சாய்க்க இருந்தார்கள். இப்படிப்பட்ட அழைப்புகளே நடைமுறையாகி சலிப்புத் தட்டியிருந்ததில் பலர் அலுப்படைய இருந்ததாகத் தோன்றியது. அந்த அலுப்பைக் காண இவன் கண்களில் தீவிரம் கூடியது. இவன் சக்தியைத் திரட்டிக்கொள்ள வேண்டியவனாய் உணர்ந்தான். பிரகாசம் பெற்ற இவன் கண்களில் தீபம் எரிவதைக் காண எவனோ ஒருவன் பயத்தில் அலறியது கேட்டது.

“கொலைகாரன்; கத்தி கத்தி ..இவன் கத்தி வச்சிருக்கான்”

அதைத் தொடர்ந்து பலரும் ‘ஆமாம் ஆமாம்’ என்று கத்துவதாகத் தோன்றியது. “இவ்வளவோ நேரம் யாரும் இவன் கண்ணப் பாக்கல...”

“இப்பத்தான தெரிஞ்சிது இவன் யாருன்னு...”

“இவன யாரு உள்ள உட்டது.”

புரிய ஏற்படாத ஒரு உணர்ச்சியில் இவனுக்கு வியப்புக் கூடியது. இவன் எவ்விதம் அவர்களிலிருந்து மாறுபட்டவன் என்பது இவனுக்குத் தெரிய இல்லை.

கத்தி, கத்தி, கொலைகாரன் என்ற குற்றச்சாட்டுகள் தொடர்வதாயிருந்தன. இவனுக்கு இல்லை இல்லை என்று கத்தவேண்டும் போலிருந்தது. அப்படிக் கத்துவதில் நிஜத்தை நிரூபிக்க முடியாது என்னும் ஆற்றாமையில் குரல் கமருவதாக இருந்தது. ஒரு தேவையில் உடைகளைக் களைந்ததில் இவன் நிர்வாணமானான். சலிப்போடு கூடிய இவன் குரல் என்னிடம் எந்த ஆயுதங்களும் இல்லை என்பதாக வெளிப்பட்டது.

ஒரு பிரமிப்பில் ஜனங்கள் அசைவற்றுப் போயிருந்தார்கள். எங்கோ ஒரு குரல் ‘இவன் கிறிஸ்துவன்’ என்று எழுவதாகயிருந்தது. இவனுக்கு அதிர்ச்சியாக இருந்தது. இவன் கழுத்திலும் சிலுவை தொங்கியது என்னும் ஞாபகமே நினைக்க அசிங்கமாகியதில் அருவருப்படைந்தான். சந்தர்ப்ப வசத்தால் எச்சமிட்ட ஒரு காக்கைப்பீ என அதை அறுத்து எறிந்ததில் தோற்றம் அமைதி கொள்வதாயிருந்தது.

ஜனங்கள், கையால்—நெற்றிக்கும் மார்புக்குமாக—சிலுவை வரைந்து கொண்டு ‘பிதாவே மன்னியும்’ என்பதாக இவனுக்குக் கேட்டது. எவனோ ஒருவன் இவனை ‘சைத்தான்’ என்று அழைப்பதாகவும் இவனுக்கு

நிச்சயம். இவனுக்கு ஒரு வேதனையில் சிரிக்கத் தோன்றியது. இவன் ஹிந்துவா முஸ்லீமா என்பதில் அவர்களுக்குள் அபிப்ராய பேதங்கள் எழுந்தது. பிறகு ஜாதியில் பேரைச் சொல்லி இவனை விளிப்பதில் அவர்கள் அக்கரை காட்டுபவர்களாயிருந்தார்கள்.

எல்லாவற்றுக்கும் இவன் இல்லையென்றே தலையாட்ட இருந்தான். கடைசியில் யார்தான் நீ! என்று அதட்டுவதைப் போல ஒரு குரல் எழுந்தது. இவன் அதற்கும் பதில் சொல்ல முடியாதவனாகவேயிருந்தான். இவன் யாரென்பதை அவர்களால் கண்டு கொள்ள முடியாதிருந்தது. இவன் கொலைகாரன், கொலைகாரன் என்றே எல்லாரும் கத்துவதாகத் தோன்றியது. 'இல்ல அவங்கிட்ட கத்தி இல்ல' என்பதாக ஒரு குரல்; 'இல்ல அவன் எங்கியாவது வச்சிருப்பான்' என்று மறுப்புக்கள் எழுந்ததில் அடங்கி இருந்தது. அவர்கள் இவனை ஒரு சூனியக்காரன் என்றார்கள். மேலும் அவர்கள் வார்த்தைகளுக்குத் தேடியதில் இவன் அவகாசம் கொடுத்துக் காத்திருப்பவனாய் இருந்தான்.

இவன் மேலே சிறு சிறு கற்கள் வந்து விழத் தொடங்கின. போகப் போக அவை அளவில் பெரிதாகிக் கொண்டு வந்தன. இவன் நின்ற இடத்தை விட்டு அசைய விரும்பாதவனாய் இருந்தான். ஜனங்கள் துணிச்சல் கொண்டு நெருங்குபவர்களானார்கள். ஒருவன் முன்னே பாய்ந்து இவன் முகத்தில் குததியதில் உதடு கிழிய இருந்தது. அதைத் தொடர்ந்து பிடரியில் விழுந்த அடியில் இவன் தடுமாறிக் கீழே சாய வேண்டியிருந்தது. இவன் மயக்கமுற்றான என்பதில் இவனுக்கு சந்தேகம். உடம்பெங்கும் நரம்புகள் விண் விண்ணென்று தெறிப்பதாயிருந்தன. ஒரு தாக்குதல் முடிவுற்ற ஆயாசத்தில் ஜனங்களின் குரல் சிறிது சிறிதாக மங்கித் தேய்வதாயிருந்தது.

ஒரு நிசப்தத்தில் மீண்டும் உறங்கிப் போய்விட நேருமோ என்று இவன் கலவரம் கொண்டான். விழிகளை இவன் திறக்க முயன்றதில் ஒரு கனத்த கல்தூணில் கட்டப்பட்டிருப்பதாகத் தோன்றியது. சூரையாடப்பட்ட இடம் என வெறித்துக் கிடந்த மைதானத்தில் ஜனங்கள் எங்கு மறைந்தார்கள் என்பது தெரியவில்லை. சிதறிக் கிடந்த உணவுப் பண்டங்களை எப்போதோ சில பறவைகள் வந்து கொத்துவதாயிருந்ததில் இவனுக்கு மறுபடியும் கனவுகள் தோன்ற ஆரம்பித்தன.

இவன் வீதி வழியாக அழைத்துச் செல்லப் படுகையில் மாதா கோயிலில் பிரார்த்தனை நடந்து கொண்டிருந்தது. 'பரமண்டலங்களிலே யிருக்கிற எங்கள் பரம பிதாவே' என்பதான ஜபத்தின் முதல் வாசகம் இவனுக்குக் கேட்பதாயிருந்தது. நியாயஸ்தலத்தில் இவன் கலகக்காரன் என்று குற்றம் சாட்டப்பட்டான். சிரச்சேதம் அல்லது கழுவிலேற்றுதல் இதற்குரிய நிச்சயமான தண்டனை என்பது இவனுக்குத் தெரிந்திருந்தது. மணியோசை மூன்று முறை ஒலித்து அடங்க அவர்கள் தீர்ப்பு வழங்குவதாயிருந்தார்கள். யாரோ இவன் கட்டுகளை அவிழ்ப்பதாகத் தோன்றியதில் இவன் கனவுகள் கலைய இருந்தன. ●

---

## கு. அழகிரிசாமி இலக்கிய வட்டம்

மறைந்த தமிழ்ச் சிறுகதை எழுத்தாளரும் சிறந்த மனிதாபிமானியுமான கு. அழகிரிசாமியின் 2-ம் ஆண்டு நினைவை ஒட்டி, அவருடைய இலக்கியப் பணிகளை மீண்டும் நினைவுபடுத்தும் வகையில் 'திறனாய்வு'க் கட்டுரைகள் எதிர்பார்க்கப்படுகின்றன.

மூன்று பரிசுகள் உண்டு.

முடிவு தேதி: அக்டோபர் 30.

தலைப்பு: "20-ம் நூற்றாண்டுத்
தமிழ் இலக்கியத்தில்
கு. அ. வின் சுவடுகள்"

கட்டுரை அனுப்பும் முகவரி:
க. அரங்கராசன்
முத்துநகர்,
கோவை 26.

குறியீட்டுத் தன்மையின் மிகச்சிறப்பான வெளியீடாக பாஸ்கரனின் இக் கண் காட்சி ஓவியங்கள் இருக்கின்றன. இவை பாரம்பரிய இந்தியக் குறியீடுகள் என்றாலும், வாழ்க்கையின் பல கட்டங்களை, தோற்றத்தை, தொடர்ச்சியை, நசிவைக் காட்ட இவை உலகெங்கும் ஏற்றுக்கொள்ளப்பட்டுவிட்டன.

பெண்ணில் அலையெனத் தெரியும் கால்கள், லிங்கம், முட்டை, பாம்பு அனைத்தும் படைப்பைக் குறிக்கின்றன. இரட்டை மேடுகள் இயற்கையின் ஆதார சக்திக்கான மூலத்தைக் காட்டுகின்றன. இவற்றைச் சுற்றித் தெரியும் புதர் போன்ற வளர்ச்சி மனிதனின் சுகங்களைச் சொல்கிறது. பாம்பு நெளிந்து போய்க் கொண்டே இருக்கிறது. முட்டையை நோக்கி ஒரு நேரம், லிங்கத்தை நோக்கி ஒரு நேரம், புதருக்குப் பின்புறமாக ஒரு நேரம்; இவை அனைத்தும் சாஸ்வதமாக நிகழும் காலத்தின் இரக்கமற்ற பயணத்தைச் சொல்கின்றன. காலத்தின் அமைதியான, மூழ்கடிக்கும் அலைகளின் நடுவே ஆச்சரியமான விதத்தில் அசைவற்றுத் தெரியும் அச்சானியமான காகம் மட்டுமே நெருங்கிவிட்ட முடிவைக் குறித்து உரக்கப்பிரலாபித்து இந்த நாடகத்தில் ஒலி எழுப்புகிறது. திடீரென்று சில ஓவியங்களில் இது மர்மமாக, வெள்ளையாக மாறி ஊமைத்தனம் கொண்டு விடுகிறது. ஏதோ ஒரு சந்தர்ப்பத்தால் சொல்ல முடியாத ஒன்றைக் கள்ளத் தனமாகப் பார்த்து விட்டதுபோல். தனிமையான, குதூகலமான, தெளிவான அல்லது வாடிப்போன சூரியன் ஒன்றுதான் இந்த முடிவற்ற துக்கத்திற்கு, மனிதனின் தவிர்க்க முடியாத தனிமைக்குச் சாட்சி கூறிக்கொண்டு இருக்கிறது. தனித்துக் காணப்படும் மலர் மனிதனை அவனுடைய நெருக்கம் நிறைந்த பாதையில் அவனுடைய நிர்ணயிக்கப்பட்ட முடிவை நோக்கி ஆசை காட்டி அழைத்துச் செல்லும் மெலிந்த நம்பிக்கை.

சாதாரணமாக மேலோட்டமாகப் பார்ப்பவருக்கு இந்த ஓவியங்களும், வரை படங் களும் இரு பரிமாணம் கொண்டவையாகவே தெரியும். ஆனால், ஆழ்ந்து நோக்குபவர் நான்காவது பரிமாணத்தைக் கவனிக்காமல் இருக்க முடியாது. எல்லாவற்றிற்கும் கீழ் அமைதியாக ஓடும் ஆதாரமான கால ஓட்டம். இதன் பின்னணியில் எல்லாக் குறியீடுகளும் பொருள் பொதிந்தவையாக மாறுகின்றன.

''தேடல்''—இதுதான் பாஸ்கரனுக்கு ஓயாத கருப்பொருளாக இருக்கிறது. சாஸ்வ தமான உண்மையைத் தேடும் அவருடைய தணிக்க முடியாத தாகம்; பிறப்பு, வாழ்க்கை, இறப்பு ஆகியவற்றைப் பற்றி, சிக்காமல் போய்க் கொண்டிருக்கும் அர்த்தங்கள் மாற்றி மாற்றி அமைக்கப்படும் குறியீடுகள்—ஈர்க்கும் கால்கள், சக்தி நிறைந்த லிங்கம், அசைவற்ற முட்டை, துடிக்கும் கரு, விதி 'நிறைந்த' காகம், நழுவி ஓடும் பாம்பு, தனிமை யான சூரியன், தனித்து ஏங்கும் மலர்—மூலம் நீட்சி பெறுகின்றன.

கே. வெங்கடராமன்

# பாஸ்கரனின் ஓவியங்கள்

ஏழாவது தனிநபர் கண்காட்சி

சரளா ஆர்ட் காலரி, ஹோட்டல் கன்னிமரா, சென்னை

அக்டோபர் 5 முதல் ஏழு நாட்கள்.



R. B. BHASKARAN : "The Cycle," Life.

முன்னணியில் இருக்கும் சென்னை ஓவியர்களில் ஒருவர்' பாஸ்கரன். சென்னை கலை மற்றும் கைவினைப் பொருள் கல்லூரி மாணவரான பாஸ்கரன் ராஜஸ்தானத்து பனஸ்தாலி வித்யா பீடத்திலும், யுனெஸ்கோவின் உதவியில் இஸ்ரேலிலும் காட்சிக் கலையின் இதர அம்சங்களைப் படித்தார். தனிநபர் ஓவியக் கண்காட்சிகளை உள்நாட்டிலும், வெளிநாட்டிலும் பாஸ்கரன் வைத்திருக்கிறார். ஓவியத் துறையில் முக்கியமான பரிசுகளையும் பெற்றிருக்கிறார். இத்தாலிக்கும், பிரான்ஸுக்கும் சென்றிருக்கிறார்.

மௌண்ட்ரோடில் உள்ள 'ஃபர்ஸ்டு நேஷனல் ஸிட்டி பாங்க்'கில் இவர் செய்திருக்கும் சுவர் சுதை ஓவியங்கள் தெருப் பார்வையாளர்களுக்குக் கூடப் பரிச்சயமுள்ளது.

முப்பது வயதான பாஸ்கரன் தற்சமயம் சென்னை கலைக்கல்லூரியில் பணியாற்றுகிறார்.



Evolution

# விடுதலைக்குப்பின் இந்தி இலக்கியம்

எஸ். என். கணேசன்

ஒவ்வொரு காலத்திலும் இலக்கிய உணர்ச்சிக்கு உருக்கொடுப்பதில் தற்கால சமுதாயச் சூழ்நிலைகளுக்கு முக்கியமான பங்குண்டு. எக்காலத்திய இலக்கியப் படைப்பும் அக்காலத்தின் வாழ்வினை முழுதாகப்பிரதி பலித்துக் காட்டாதபோதிலும் காலந்தோறும் மாறிவரும் நோக்கும், வாழ்க்கையுணர்ச்சியும் இலக்கியத்தைப்பாதிக்கத்தான் செய்கின்றன. ஆகவே சுதந்திர இந்தியாவின் இலக்கியங்களின் வளர்ச்சியைப் பொதுவாகப் பார்க்கும் பொழுது மாறிக்கொண்டிருக்கும் ஒரு சமுதாயத்தின் முக்கிய இயல்புகளும் பண்புகளும் தோற்றமளிப்பதோடு படைப்பாளியின் வாழ்க்கையுணர்ச்சியிலும், சிந்தனைப் பாணியிலும் ஏற்படும் மாற்றங்களும் தென்படுகின்றன. மிகச் சிக்கலான சமுதாய வாழ்வினையும், அந்தச் சமுதாயத்தின் நடுவே வாழும் தனிமனிதனுக்கு ஏற்படும் மனச் சிக்கல்களையும் நம்பிக்கை(sincerity)யோடு எடுத்துக்காட்ட முயற்சி செய்யும் பொழுது, அதற்கேற்ப வெளியீட்டு (expression) முறையில் வந்துள்ள மாறுதல்களும் கால உணர்ச்சிக்குச் சான்றாக நிற்கின்றன.

கவிதை, நாடகம், நாவல், கதை இவற்றையெல்லாம் ஆராய்ந்து பார்க்கும் பொழுது இரண்டு முக்கியத் தன்மைகள் வெளிப்படுகின்றன. முதலில், வாழ்வின் பரப்பையும், சிக்கலையும், குழப்பங்களையும் கூர்ந்து காணும் தனிப் பிரக்ஞை (consciousness); இரண்டாவதாக அனுபவத்தின் ஆழத்தைக் கோட்டமின்றிக் காட்ட வெளியீட்டு முறையில் ஆய்வும், படைப்பில் புது மதிப்புகள் (new values) நிறுவுதலும். இவ்விரண்டு தன்மைகள் காரணமாக படைப்பு அதிக பரப்பைப் பெற்றுள்ளது. எல்லா இலக்கிய வடிவங்களும் சிக்கல் நிறைந்தனவாகவும், அதிக வலிவுடையனவாகவும் மாறியுள்ளன.

சுதந்திரமடைவதற்குமுன் இலக்கியத்தில் கண்டிருந்த சமுதாய வளர்ச்சி நோக்கும், முன்னேற்ற நோக்கும் விடுதலைக்குப் பின் தேய்ந்துள்ளது. ஒரு லட்சியத்தை அடைந்தபின் லட்சிய ஆர்வம் குறைவது இயல்பே. இம்முறையில் சுதந்திரப்போரில் வளர்ந்து வந்த 'தூண்டுதல் இலக்கியம்' மாய்ந்தது எதிர்பார்த்ததே. ஆனால் அத்துடன், சீர்திருத்த, முன்னேற்ற நோக்கங்களும் தேய்ந்தது இலக்கியக் கொள்கையில் வந்த அடிப்படை மாறுதல் காரணமாகவேயென்று கூறலாம். சீர்திருத்தமும், முன்னேற்றக் கொள்கைகளும் படைப்பின் இன்றியமையாத் தன்மைகளுக்கப்பாற் பட்டனவென்று கருதப்பட்டு ஒதுக்கப்பட்டன. கவிதையிலும், கதையிலும் இவை முற்றிலும் மறைந்தது அன்னிய இலக்கிய வடிவங்களில் இளைத்து ஓரளவுக்கு காணப்படுகின்றன.

உண்மையாக இதை சமுதாய உணர்ச்சி குன்றுதலாக கருதுவதற்கில்லை. இதை சிந்தனைப் பாணியின் திசைமாற்றமாகவே கொள்ளவேண்டும். கவிதை, சிறுகதை, நாவல் இவை இந்தப் புது திருப்பங்களால் அதிகமாக வளர்ச்சி அடைந்துள்ளன. நாடகம், ஓரங்க நாடகம் போன்றவை ஓரளவுக்குப் பாதிக்கப் பட்டுள்ளன.

கவிதையுலகில் புதுக் கவிதையின் வளர்ச்சியை இக்காலத்தின் முக்கிய சம்பவமாகக் கருதலாம். ஆனால் அன்னிய பாணியிலுள்ள கவிதையும் புறக்கணிக்க முடியாத விதத்தில் வளர்ந்துள்ளது. பரம்பரைக் கவிதையும் கூடுதலாக மதிநுட்பத்தை யடைந்து புதிய வாழ்க்கைச் சந்தர்ப்பங்களை ஆழமாகக் காணவும், பிரச்சினைகளை ஆராய்ந்தறியவும் அதிக ஆற்றல் பெற்றுள்ளது.

பரம்பரையாக வளர்ந்துள்ள பெருங் காப்பியம்கூட தற்கால உணர்ச்சியால் பாதிக்கப் பட்டுள்ளது. அபார பரம்பரைப் பற்றுள்ள கவிஞர் மைதிலீசரண குப்தரின் 'ஜய பாரத்', 'விஷ்ணுப்ரியா' போன்றவை புராணக் கதைகளை அடிப்படையாகக் கொண்டுள்ள போதிலும், புதிய வாழ்க்கைச் சந்தர்ப்பங்களை எடுத்துக் காட்டுகின்றன. குறிப்பாக 'ஜய பாரத்'தில் மகாபாரதப் போர் நன்மை

தீமைகளுக்கிடையே நிரந்தரம் நடந்து கொண்டிருக்கும் தவிர்க்க முடியாத போராகக் காட்சியளிக்கின்றது.

தினகரின் 'ரச்மிரதீ' (கர்ணன் வாழ்க்கையை அடிப்படையாக) 'ஊர்வசி'யும், சுமித்திரா நந்தன பந்தின் 'லோகாயதன்', தர்மவீர பாரதியின் 'கனுப்ரியா', நரேந்திர சர்மாவின் 'திரௌபதி' இவையும் மதிநுட்பத்துடன் பிரச்சினைகளைக் காணும் புதிய வாழ்க்கையுணர்ச்சியையே காட்டுகின்றன. கட்டமைப்பில் வந்துள்ள சொற் சிக்கனமும், இறுக்கமும் புதுயுகத்தின் இலக்கியத் தன்மைகளே. சுதந்திரம் பெறுவதற்கு முன் வெளி வந்துள்ள பெருங்காப்பியங்களில் 'காமாயனி'யைத் தவிர எதிலும் இக்காப்பியங்களில் உள்ள பரப்பும் ஆழமும் இல்லை. தற்கால வாழ்வின் தனித்தன்மைகளும், பிரச்சினைகளும் ஆராயப்படுவது மட்டுமல்லாமல் அவற்றில் பலவற்றையும் மனித வாழ்வின் நிரந்தரப் பிரச்சினைகளாகக் காண்பதும் இவற்றின் முக்கிய தன்மைகளாகும்.

கால உணர்ச்சியின் வேறு ஒருவிதமான போக்கை முன்னேற்றக் கவிதையில் காணலாம். முன்னேற்றக் கவிதையும் விடுதலைக்குப் பின் முன் காலத்தைவிட அதிகம் ஆழம் பெற்றுள்ளது. இலக்கியக்கலை என்ற முறையிலும் அதன் வெளியீட்டு முறை அதிகம் வலுவடைந்துள்ளது. சாதாரண மனிதன் வாழ்வின் சாதாரண நிலையை நம்பிக்கையாக வரைதல், மனிதன் முழுத்தன்மை (total individuality)யை சித்திரம் போல் காட்டுதல், முதலாளித்துவப் பண்பாட்டைத் தீவிர நோக்குடன் பார்த்தலும், கிண்டல் செய்தலும், முன்னோக்க, பின்னோக்கச் சக்திகளின் எதிர்நிலைகளை (opposition)யும், அவற்றால் ஏற்படும் மாறுதல்களையும் கண்டு விளக்குதல், இவை இக்காலத்து முன்னேற்றக் கவிதையின் தன்மைகளாகும். முன்னைப்போல் நேரடியாகச் சீர்திருத்த நோக்கமும், கோஷங்களும் இல்லாதிருந்துகூட ஒரு லட்சிய நோக்கும், வாழ்வில் நம்பிக்கையும் இத்தகைய கவிதைகளில் காணமுடியும். நாகார்ஜுன், ராம விலாஸ் சர்மா, சிவமங்கல் சிங்சுமன், திரிலோசன் சாஸ்திரி, மகேந்திர பட்நாகர் முதலியோர் கவிதைகள் இவ்வினத்தைச் சேரும். இவர்கள் கவிதைகள் பலவற்றில் கிராம வாழ்க்கையினுடையவும் நகரவாழ்க்கையினுடையவும் உயிருள்ள சித்திரங்களைக் காணலாம். வாழ்வினை விலகி நின்று பற்றற்ற நிலையில் பார்த்துக் காணாமல், அதில் ஈடுபாடு உடையவர்களாகவே கவிஞர்கள் காணப்படுகின்றனர். இதனால் தற்கால முன்னேற்றக் கவிதையில் மனிதனை நெருங்கிய நட்புணர்ச்சியுடன் காணும் தன்மை வளர்ந்துள்ளது.

புதுக் கவிதை வளர்ச்சி பெற்று இலக்கியத்தில் மிகச் சக்திவாய்ந்த ஒழுக்காக அது வலிமை அடைதல் — விடுதலைக்குப்பின் இந்திக் கவிதையின் வரலாற்றில் மிக முக்கியமான சம்பவம் என்று கூறலாம். 1943—ல் தொடங்கிய புதுக் கவிதையியக்கம், சில வருடங்கள் பலமான எதிர்ப்பையும் தாட்சணியமில்லாத விமரிசனத்தையும் எதிர்த்து நின்று, வலிமை பெற்றுள்ளது. 1950. லிருந்து இருபத்திரண்டு ஆண்டுகளாக அது கண்டுள்ள வளர்ச்சி அதை இன்றைய கவிதைப் பாணிகளில் அதிகம் வலிமையுற்றதாக ஆக்கியுள்ளது.

இந்த இருபது, இருபத்திரண்டு வருடங்களாக புதுக்கவிதை அதிகம் புதுமை பெறவும், மனித உள்ளத்தின் ஆழமான நிலைகளை ஆராயவும் முயற்சி செய்து வருகின்றது. புதுமை ஆர்வத்தில் பல கவிஞர்கள் உணர்ச்சியற்ற, சாதாரணக் கவிதைகள் அனேகம் எழுதி விடுகின்றனர் என்பது உண்மையே. யாப்பின் கட்டுப்பாடிலிருந்து விடுதலை பெற்றதும், படைப்புத் திறனற்றவரும் கவிஞர் வரிசையில் சேர்ந்து ஏராளமாக எழுதுகின்றனர். பல மட்டமான கவிதைகள் வெளிவருகின்றன என்பதில் வியப்படைய வேண்டியதில்லை. ஆனால் தற்கால வாழ்வின் பெருத்தகேடுகளையும், தனிமனிதன் ஏமாற்றத்தையும், மனக் கசப்பையும் எடுத்துக் காட்டவும், இந்நிலையில் ஏற்படும் மனநிலைகளை ஆழமாக ஆராயவும் புதுக் கவிதை முயன்றுள்ளதென்றும், அதில் ஓரளவுக்கேனும் வெற்றி பெற்றுள்ளதென்றும் ஒப்புக்கொள்ள வேண்டும்.

1960—க்கு மேல் 'சசேதன் கவிதை' (உயிர் வலிமையுள்ள கவிதை), 'அகவிதை' (கவிதையல்லாத கவிதை) போன்றவை கவிதையின் நோக்கத்தையும், வடிவத்தையும் மீண்டும் மாற்றி அமைத்துப் பல புதுமைகள் தந்துள்ளன. அவற்றின் ஆற்றல்களை நன்குகப் புரிந்து முழுமையாக மதிப்பீடு செய்ய இன்னும் காலம் ஆகவில்லை. ஆகிலும், வாழ்வின் பெருத்த கேடுகளுக்கிடையே, கட்டுப்படுத்த முடியாத சூழ்நிலையில் அகப்பட்டு தன்னையே இழந்து நிற்கும் தனி மனிதனின் தெளிவற்ற உணர்ச்சிகளையும் சிக்கலான மன நிலைகளையும் அனுதாபத்துடன் வரைந்து காட்டுவதில் அக்ஜேய், கஜானன் மாதவ் முக்திபோத், ஹரிவம்ச ராய்பச்சன், கிரிஜாகுமார் மாத்துர், சம்சேர் பகாதுர் சிங், பாரத் பூஷண் ஆக்ரவாள், நேமி சந்திர ஜைன் போன்றோர் கவிதைகள் பல வெற்றி பெற்றிருக்கின்றன என்பதில் ஐயமில்லை. புதுக்கவிதையின் ஆரம்ப காலத்தில் தோன்றியிருந்த மனக் கசப்பும், பதற்றமும் தற்

பொழுது குறைந்து வருகின்றன. புதிய தலை முறையினராகிய கேதாரநாத் சிங், ராமதாச மிஸ்ர, கீர்த்தி சௌதரி, ராஜேந்திரப் பிர சாத் சிங், பால ஸ்வருப்ராஹி முதலியோர் கவிதைகளில் வாழ்வில் அதிக நம்பிக்கையும், விருப்பும் காணமுடியும்.

கவிதையின் இம்மூன்று கிளைகளும் சேர்ந்து இந்தியாவின் தற்கால வாழ்வின் பல்வேறு நிலைகளையும், அவற்றின் உள் தூண்டுதல்களையும், சிந்தனைப் பாணிகளையும் ஒருவாறு முழுமையாகவும், அதிக ஆழமாக வும் காட்டுகின்றன என்று கூறலாம்.

சுதந்திரம் பெற்றபின் நாவல் இலக்கியம் பல்வேறு நிலைகளில் வளர்ச்சியடைந்துள்ளது. அது வரைந்து காட்டும் வாழ்வின் பரப்பு மிகவும் அதிகரித்துள்ளது. அதன் வெளி யீட்டு முறையிலும், சட்டமைப்பிலும் பல் வேறு உத்திகள் இடம் பெற்றுள்ளன.

புதிதாகத் தோன்றியுள்ள இலக்கியச் சிந்தனைப் பாணியின் விளைவாக, சிக்கல் நிறைந்த வாழ்க்கைச் செயல்களை (complex-life processes)யும், அவற்றைத் தூண்டும் சக்திகளையும் முழுமையாகக் காணவும், அதோடு மனதின் பல பிரக்ஞை நிலைகளி லுள்ள செயல்பாடுகளை அறியவும் முயற்சி செய்யப்பட்டு வருகிறது.

சுதந்திரப் பேற்றுக்குப் பின் இந்தி நாவலின் வளர்ச்சி இரண்டு திசைகளில் திரும்பியுள்ளது. பிரேம்சந்துக்குப்பின் சில வருடங்கள் நாவலில் குன்றிவந்த பரப்பான சமுதாய நோக்கம் 1950 –லிருந்து மீண்டும் வளர்ச்சியடையத் தொடங்கியது. நாகார் ஜுன், யக்ஜ தத்த், இவர்களின் நாவல்களில் விரிவடைந்த சமுதாய நோக்கம், 1954—ல் பணீசுவர்நாத் ரேணுவின் 'மைலா ஆஞ்சல்' (தூசி நிலம்) மூன்று வருடத்துக்குப்பின் அவருடைய 'பரதீ பரிகதா' (வரட்சி நிலத் தின் பெருங்கதை) என்ற வட்டார நாவல்கள் வெளி வந்ததோடு, நாவலின் ஒரு முக்கிய தன்மையாகக் கொள்ளப்பட்டது. அத்துடன் வாழ்வின் பரப்பைக் காட்டும் பெரும் நாவல் கள் பல வெளிவரத் தொடங்கின. வாழ்வின் பல சூழ்நிலைகளையும், பல முகங்களையும் காணும நாவல்கள் பல எழுதப்பட்டன. பகவதீசரண்வர்மாவின் 'மறதியில் தங்கிய சித்திரங்கள்', 'உண்மைச் செய்திகள், 'ஆட்டு கின்றுன் ஐயனவன்' என்ற மூன்று பெரும் நாவல்கள் சேர்ந்த தொடர் 1885—லிருந்து இது வரையிலும் இந்தியா அடைந்துள்ள குடும்ப, சமுதாய, அரசியல் மாற்றங்களை எடுத்துக்காட்டும் பெரும் படைப்புகளாகும். அதேபோல் யஷ்பாலின் 'பொய்யான உண் மைகள்' என்ற நாவல் சுதந்திரத்துக்கு முன்னும் பின்னுமுள்ள சமுதாய வாழ்க்கை யின் பரந்த சித்திரங்கள் தருகிறது. இவற் றைத் தவிர ராங்கேய ராகவின் 'எப்பொழுது வரை அழைத்துக் கொண்டிருப்பேன்', நரேச மேத்தாவின் 'இந்த வழியே துணையாயிருந் தது' அமிர்தலால் நாகரின் 'துளியும் கடலும்' 'அமிர்தமும், விஷமும்' சிவபிரஸாத் சிங்கின் 'பற்பல நாகங்கள்' போன்ற பல நாவல்களும் பரந்த நோக்குடன் வாழ்வினைக் காண் பவையே. பகவதீ பிரசாத் வாஜ்பேயி, பிர தாப நாராயண் ஸ்ரீவாஸ்தவ், யாதவ சந்திர ஜைன், ஹிமாம்சு ஸ்ரீவாஸ்தவ், மனஹர் சௌஹான், யாதவேந்திர சர்மா, ராஜேந்திர யாதவ் முதலியோரும் சில எல்லைகளுக்குள் வாழ்வின் பல்வேறு வடிவங்களை ஆழமாக வரைந்து காட்டியுள்ளனர்.

நாவலின் இரண்டாவது வகை, மனிதன் மனவுலகையும், அதன் சிக்கல்களையும் வெளிப்படுத்திக் காட்டுவதேயாம். உளவியல் சார்புடைய இந்தத்தன்மை அதிகம் வளர்ச்சி யடைந்துள்ளது என்று கூற முடியாது. சூழ் நிலையின் எல்லை வகுத்துக்கொண்டு, தனி மனிதனையே மையமாக வைத்து, உள்ளுல கின் தன்மைகளையே ஆழமாகக் காட்டும் மேநாட்டுப் பாணியிலுள்ள 'தனித்தன்மை நாவல்கள்' (individualistic novels) அதிக மாக வளரவில்லை. ஆனல் சமுதாயச் சூழ் நிலைக்கு ஓரளவுக்கு வரையறுத்துச் சுருக்கி, குறுகிய சூழ்நிலைகளில் உளவியல் தன்மைகளை ஆராயும் நாவல்கள் அனேகம் வந்திருக் கின்றன. உபேந்திரநாத் அஷ்க், ஆனந்த பிரகாச ஜைன், ராஜேந்திர யாதவ், நிர்மல் வர்மா, கிருஷ்ண சந்திர சர்மா போன்றோர் இக்கிளையை வளர்த்துள்ளனர்.

விருந்தாவன் லால் வர்மா, யாதவ சந்திர ஜைன், வால்மீகி திரிபாடி முதலியோரின் வர லாற்று நாவல்கள் பல வெளி வந்துள்ளன. இவற்றில் படைப்பென்ற நிலையில் தனித் தன்மை அதிகம் இல்லாதபோதிலும் வரலாற் றுச் செய்திகளும், கற்பனைத் திறனும் கலந்து காணப்படுகின்றன.

சிறு கதையிலும் 1950 அடுத்து புத் துணர்ச்சி ஏற்பட்டது. உண்மைகளின் புதிய உருவங்களைக் கண்டுபிடிக்க முயன்று கொண் டிருக்கும் கதையாசிரியர்கள், கதையின் 'கதைத் தன்மை'யைக் கைவிட்டு 'உணர்ச்சி களின் சித்திரங்கள்' வரைய முற்பட்டிருக் கின்றனர். இதனல் சிறுகதை புதுவடிவம் பெற்றுள்ளது. ஆசிரியர் தனி நோக்கும் கதையில் பிரதிபலிக்கிறது. தர்மவீர பாரதி, பணீசுவர் நாத் ரேணு, மோகன் ராகேஷ், கமலேசுவர், சிவபிரசாத்சிங், ரகுவீர சகாய், கிருஷ்ண பலதேவ் வைத் இவர்கள கதைகள் இவ்விதம் கலை வடிவம் உடையனவாகவும்,

எழுத்தாளர் தனி முத்திரை பதிந்தனவாகவும் உள்ளன.

செய்திகள் தருவது, சம்பவங்களை அடுக்காகச் சொல்வது, பாத்திரங்களை வருணிப்பது இப்படி கதைக்கு இன்றியமையாததாகக் கருதப்பட்டு வந்த அம்சங்கள் பல தற்போது தவிர்க்கப்படுகின்றன. 1960—க்கு மேல் வளர்ந்துவரும் 'சசேதன்' கதை 'அகஹானி' (கதையல்லாத கதை) இவை இம்முயற்சியின் விளைவுகளே. இவற்றில் வாழ்க்கைச் சந்தர்ப்பங்கள், மனநிலைகள், உளச்சிக்கல்கள் இவற்றின் கலை வடிவங்களே வரையப்படுகின்றன. கங்கா பிரஸாத் விமல், அவத் நாராயண், மகேந்திர பல்லர், ஞான ரஞ்சன், ரவீந்திர காலியா முதலியோர் இத்தகைய கதைகள் எழுதி வருகின்றனர்.

விடுதலைக்குப் பின்னும் நாடகத்தில் புதிய படைப்புணர்ச்சி அதிகமாக வளரவில்லை. ஹரி கிருஷ்ண பிரேமி, ராமகுமார் வர்மா, உதய சங்கர் பட், விருந்தாவன்லால் வர்மா போன்ற பழைய ஆசிரியர்கள் சுதந்திரத்திற்குப் பின் எழுதியுள்ள நாடகங்களில் புது சமுதாய வாழ்வின் பல சந்தர்ப்பங்களும், சிக்கல்களும் இடம் பெற்றுள்ளன. ஆனால் அமைப்பைப் பொறுத்தவரையில் அவை பழைய வடிவத்தில் தானிருக்கின்றன. விபரங்கள் தரும் சம்பாஷணைதான் இவற்றில் முக்கியமாக நிற்கின்றது. வரலாற்றுப் பொருளையொட்டி எழுதப்பட்ட நாடகங்களில் சூழ்நிலைகளும் தெளிவாகக் காட்டப்பட்டுள்ளன.

புதிய இலக்கியக் கொள்கைகளையொட்டி எழுதப்பட்டுள்ள சில நாடகங்கள், உபேந்திர நாத் அஷ்கின் 'அஞ்ஜோ தீதி' 'அஞ்சோ அக்காள்', 'வெவ்வேறு வழிகள்' 'இருள் சந்து', லட்சுமீ நாராயண் லாலின் 'இருள் கிணறு', 'கண்ணடி' 'கிளியும் மைனாவும்' என்பவை. இன்றைய வாழ்க்கையின்—முக்கியமாகக் குடும்ப வாழ்க்கையின் சில பிரச்சினைகள் உண்மையுணர்ச்சியுடன் இவற்றில் கையாளப்பட்டுள்ளன. மோகன் ராகேஷின் 'ஆடி மாதத்தில் ஓர் இரவு' காளிதாஸர் வாழ்வின் ஒரு சம்பவத்தை யொட்டி எழுதப்பட்டது. ஆனால் அது படைப்புச் செயலில் வரும் சிக்கல்களையே எடுத்துக்காட்டுகின்றது. அதுபோல் 'அலைகளிலே அன்னப்பறவைகள்' புத்தரின் மனமாற்றத்தை யொட்டி எழுதப்பட்டிருந்தும் மனிதன் மனக் கோட்பாடுகளையும், சிக்கல்களையும் விளக்குகின்றது. 'ஆதே அதூரே' (முழுமை பெருதவர்கள்) என்ற புது நாடகம் புதிய பாணியில் அமைந்து குறியீடுகள் வழியாக இன்றைய மனிதனின் முழுமை பெருத—முழுமை பெற முடியாத—வாழ்க்கையை வரைந்து காட்டுகிறது. இவற்றைத் தவிர சந்திரகுப்த வித்தியாலங்கார், நரேச மேத்தா, மன்னூ பண்டாரி முதலியோர் நாடகங்களும் புதிய நோக்கும் ஆராய்ச்சித் தன்மையும் உடையனவாக இருக்கின்றன.

ஏறக்குறைய இந்த தன்மைகளே ஓரங்க நாடகத்திலும் காணப்படுகின்றன. புத்துணர்ச்சியுடைய, கலைத்தன்மை நிறைந்த ஓரங்கிகள் ஏராளமாக வெளிவந்துள்ளன.

பொதுவாகக் கூறினல் தற்கால வாழ்க்கையின் பல முகங்களையும் கூர்ந்து பார்த்து உண்மையாகவும், ஆழமாகவும் வரையும் தன்மை எல்லா இலக்கியக்கிளைகளிலும் காணலாம். கொள்கைகளை நிறுவும் முயற்சியும் தேவைக்கு மிஞ்சிய உணர்ச்சியும், தவிர்க்கப்பட்டு படைப்புகளுக் கலை வடிவம் கொடுக்க முயற்சி செய்யப்பட்டு வருகிறது. ●



